KALKI 12.9.93 ரூ. 3.00

# கல்கி





# பாண்டியன் பாலிடிக்ஸ்!

கடந்த சட்டமன்றத் தேர்தலில் சேரன்மகாதேவி தொகுதியில், தோல்வியடைந்ததிலிருந்து 'தரையில் போட்ட மீனா'க இருந்தார் பி.எச். பாண்டியன். சமயம் கிடைக்கும் போதெல்லாம் ஜெ.வையும், அ.தி.மு.க. ஆட்சியையும் கடுமையாகத் தாக்கி வந்தார். நல்லாட்சி இயக்கம் என்று சு.சுவாமி தொடங்கிய போது, பாண்டியன் துணைக்கழைக்கப்பட்டார். தமிழகம் முழுதும் சுற்றுப் பயணம் செய்து அரசையும், முதல்வரையும் ஒரு பிடி பிடித்தார். ஆனால் சமீப காலத்தில் சு.சுவாமி, பாண்டியனுக்குச் சரியான முக்கியத்துவம் தரவில்லை என்று கூறப்படுகிறது.

''ஐந்து வருஷங்களாகத் தனி மனிதனாக இருந்து கொண்டு, மக்களுக்கு நல்லவைகளைச் சொல்லிப் பார்த்தேன். எவரும் என்னைப் பாராட்டுவதாகத் தெரியவில்லை. என்னுடைய உழைப்பும், சட்ட அறிவும், மற்றவர்களுக்குத்தான் பயன்பட்டு வந்தது. வேதனையான விஷயம் என்னவென்றால், யாருக்காக நான் பாடுபட்டேனோ அவர்களே, சம்பந்தப்பட்டவர்களிடம் சமரசப் பேச்சு நடத்திக் கொண்டிருப்பதைக் கேள்விப்பட நேர்ந்தது. வேறு பல கட்சிகளின் முக்கிய பிரமுகர்கள் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்து கட்சியில் ஒட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தவுடன், ஒரு கட்சியுடன் இணைந்திருந்தால்தான் எனக்கு பலம் என்பதைப் புரிந்து கொண்டேன். மேலும் தேர்தலில், வெற்றி, தோல்விதான் ஒரு அரசியல்வாதியின் எதிர் காலத்தைத் தீர்மானிக்கிறது. நான் அரசியலில் நிலைத்து நின்றால்தான் மக்களுக்கு ஏதாவது செய்ய முடியும். சேரன்மகாதேவி தொகுதிக்கு நான் செய்த நன்மைகளைப் பற்றி விரிவாகக் கல்கியில் முன்பு எழுதியிருக்கிறீர்கள். ஆயினும் தேர்தலில் மக்கள் என்னைத் தோற்கடித்தார்கள். தனியாக இருந்து அரசியல் நடத்துவது படு கஷ்டம் என்பதை உணர்ந்து கொண்டேன். தனிக்கட்சி தொடங்க நான் ஒன்றும் கோடீஸ்வரன் அல்ல. இந்தச் சூழ்நிலையில் அ.தி.மு.க.

வில் என்னை மீண்டும் இணைத்துக் கொள்ள முடிவு செய்தேன்'' என்றார் பி.எச். பாண்டியன்.

*திருப்பர்* : வேறு ஏதாவது கட்சியில் சேர்ந்திருக்கலாமே! ஏனென்றால், ஜெவையும், அ.தி.மு.க. அரசையும் மிக மோசமான வார்த்தைகளால் தாக்கிப் பேசியவராயிற்றே நீங்கள்!

*பாண்டியன்* : மற்ற கட்சிகள் என் நேர்மையை, உழைப்பை அங்கீகரிக்கத் தயாராக இல்லை. பாண்டியன் என்றால் 'வில்லங்கம் பிடித்த ஆள்' என்று கருதுகிறார்கள். அரசையும் முதல்வரையும் கடுமையாக விமர்சித்தேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவையெல்லாம் அந்தந்தச் சூழ்நிலையையொட்டி நான் பேசியவை. என்னை விடக் கடுமையாகத் தாக்கியவர்கள் இன்று அ.தி.மு.க.வில் பொறுப்புகளில் கூட இருக்கிறார்கள். ஆனால் நான் எந்த ஒரு ஆதாயத்தை எதிர்பார்த்தும் கட்சியில் சேரவில்லை. என்னைப் பொறுத்தவரை இது Home coming.

**பா**ண்டியன் அ. தி. மு. க. வில் இணைந்தது ரத்தத்தின் ரத்தங்களுக்குக் கூட அதிர்ச்சியூட்டுவதாக அமைந்திருக்கிறது. ''இன்று இருக்கும் சூழ்நிலையில் அம்மாவுக்கு இப்படிப்பட்ட ஆள் தேவைதான்'' என்றார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர். ''குறிப்பாக, ஜெவைத் தனிமைப்படுத்தி அ.தி.மு.க வைப் பிளக்க, காங்கிரஸும், சுவாமியும் முயன்று கொண்டிருக்கும் நிலையில், பாண்டியன் போன்றவர்களைக் கட்சியில் சேர்த்து சட்டமன்றத்திற்குக் கொண்டு வருவதை புரட்சித் தலைவி விரும்புகிறார்.''

இதையே வேறுவிதமாகப் பார்க்கிறார் மற்றொரு பிரமுகர். ''அ.தி.மு.கவில் இருந்து ஜெ. தனிமைப்படுத்தப்படும் சூழ்நிலையில், சுயமான கருத்தும், சிந்திக்கும் தன்மையும் கொண்ட பாண்டியன் போன்றோர் வசம், கட்சி வர வாய்ப்பிருக்கிறது. அவரது எதிர்காலத்தைப் பொறுத்தமட்டில், இது நல்ல முடிவுதான்'' என்றார் அவர்.

**இ**தற்கிடையில் சேரன்மகாதேவி தொகுதியில், தம்மை எதிர்த்துப் போட்டியிட்டு ஜெயித்த அ.தி.மு.க. வேட்பாளர், தேர்தல் விதிமுறைகளுக்கு மாறாகப் பிரசாரம் செய்து வென்றபடியால், அவரது வெற்றியை ரத்து செய்யக் கோரி பாண்டியன் சென்னை உயர்நீதி மன்றத்தில் தொடர்ந்த வழக்கில் தீர்ப்பு வர இருக்கிறது!

– ப்ரியன்





* சோ



* என். ராம்

# 'ஒரே நம்பிக்கை: நீதித்துறை!'

''சுமார் 50 வருடங்களுக்கு முன்னால் நடந்தது இது. பிரகாசம் அவர்களுக்கு ஆந்திரத்தில் பல இடங்களில் பண முடிப்பு அளிக்கப்பட்டதைக் கேட்டுக் கொதிப்படைந்தார் காந்திஜி. இதைப் பற்றி விசாரிக்கும்படி சர்தார் பட்டேலிடம் உத்தரவிட்டார். பட்டேலுக்கு இது உண்மைதான் என்று தெரிய வந்தது. திரட்டிய நிதியை எல்லாம் ஆந்திர காங்கிரஸ் அலுவலகத்தில், கணக்குப் பண்ணிச் சேர்ப்பித்துவிடச் சொன்னார். பிரகாசம் கேட்கவில்லை. தாம் நாட்டுக்காகப் பட்ட கஷ்ட நஷ்டங்களுக்காகக் கிடைத்த பண முடிப்புகள் இவை என்றார். பட்டேலுக்கு அநியாயக் கோபம் வந்துவிட்டது. 'சமூகத்தில் உங்களுக்கு இருக்கும் மதிப்பை இப்படி துஷ்பிரயோகம் செய்யாதீர்கள்' என்று எழுதினார். பிரகாசம் இது பற்றிய விவரங்களைத் தமது வழக்கறிஞர்களிடம் ஒப்படைக்கப் போவதாகக் கோபமாகப் பதில் எழுதினார். விஷயம் காந்திஜியை எட்டியது. நிதியை ஒழுங்காகக் கணக்குகளோடு காங்கிரஸ் கட்சி அலுவலகத்தில் ஒப்படைக்கவில்லை என்றால், இந்த 'ஊழலை'த் தமது 'ஹரிஜன்' பத்திரிகையில் வெளியிட்டுவிடப் போவதாகக் கடுமையாக எழுதினார். படேலும், நேருவும் கேட்டுக் கொண்டதன் பேரில் காந்திஜி சமாதானம் அடைந்தார். பிரகாசம்காரு பணத்தைக் காங்கிரஸ் அலுவலகத்தில் ஒப்படைத்தார். இன்றைய நிலையை ஒப்பிடும் போது, இது மிகச் சாதாரண விஷயம். ஆனால் அன்றைக்கே காந்திஜி இம்மாதிரி விஷயங்களில் எப்படிச் செயல்பட்டார் என்று நினைத்தால், அவர் மீது நமக்குப் பல மடங்கு மரியாதை பிறக்கிறது.''

– என். ராம்.

''ஆந்திர கேசரி பிரகாசம்காரு அவர்கள் மீது எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. அவர் ஒரு தேச பக்தர். ஆனால் அதே பிரகாசம் அவர்கள் இன்று உயிரோடு இருந்து, காந்திஜியும் இன்று இருந்திருந்தால், பிரகாசம் என்ன சொல்லியிருப்பார் தெரியுமா? 'நீங்கள் வடநாட்டுக்காரராகவும் நான் தென்னாட்டுக்காரராகவும் இருப்பதால்தான் என் மீது அபாண்டமாய்ப் பழி சுமத்துகிறீர்கள்!' அத்தோடு கதை முடிந்திருக்கும். அவர் துரதிர்ஷ்டம் - அந்தக் காலத்தில் வாழ்ந்தார் அவர்!

''அரசியல் வாதிகளை மட்டுமே ஊழலுக்காகக் குறை சொல்லிப் பயனில்லை. ஆன்மீகம், மருத்துவம் எல்லாத் துறைகளிலும் ஊழல் புகுந்துவிட்டது.

''நாளைக்கே ஜெயலலிதா அரசு, ஊழல் குற்றச்சாட்டுக்கள் காரணமாக டிஸ்மிஸ் செய்யப்படுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். மக்கள் என்ன சொல்லுவார்கள்? 'அவர் மட்டும்தானா ஊழல் செய்தார்? பிரதமர் மீது, பிற காங்கிரஸ் முதலமைச்சர்கள் மீது எல்லாம் ஊழல் குற்றச் சாட்டுக்கள் இல்லையா? எல்லார் மீதும் நடவடிக்கை எடுக்கப்படும்போது அவர் மீதும் எடுக்கட்டும்!

''இது எப்படி இருக்கிறது என்றால், ஒரு திருடன் பிடிபட்டுத் தண்டனை கொடுக்கப்படும் போது, மற்ற எல்லாத் திருடர்களையும் பிடித்துவிட்டுப் பிறகு இவனையும் தண்டிக்கலாமே என்று சொல்லுவது போல இருக்கிறது. ஏனென்றால் நம் மனத்தில் லஞ்ச ஊழல் ஒரு பெரிய பாவமாகத் தோன்றுவதில்லை.

''நீதித் துறை ஒழுங்காகச் செயல்பட்டாலே, ஓரளவு நிலைமை சீராகும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.''

– சோ

(க. சந்தானம் நினைவுச் சொற்பொழிவுகளில் கேட்டது)

தொகுப்பு : சித்தார்த்




# மண்டை பிளக்கும் மத ஊர்வலங்கள்!

**1990** செப்டம்பர் இரண்டாம் தேதி. விநாயகர் சதுர்த்தி ஊர்வலத்துக்குப் போலீஸ் அனுமதி வழங்கப்பட்டிருந்தது. அன்றைய தினம் ஏற்பட்ட கலாட்டாவில் போலீஸ் துப்பாக்கிச் சூடு நடத்தும்படியாயிற்று. ஒருவர் ஸ்தலத்திலேயே மரணமடைந்தார். பத்துப் பேர் காயமுற்றனர். காயமுற்றவர்களில் ஒருவர், ஆஸ்பத்திரியில் இறந்து போனார். நான்கு உயர் போலீஸ் அதிகாரிகளும், நான்கு இன்ஸ்பெக்டர்களும், 25 கான்ஸ்டபிள்களும் காயமுற்றனர்.

காரணம் என்ன?

மத மாச்சரியம்தான்! முதலில் வீசியது எந்தத் தரப்பு என்பது நிச்சயமாய்த் தெரியாவிட்டாலும், செருப்பு, சோடா பாட்டில், கற்கள் இவை இருபுறமும் பறக்கத் தொடங்கின. போலீஸ், நிலைமையைக் கட்டுப்படுத்த முயன்றபோது, போலீஸார் மீதும் தாக்குதல் ஆரம்பித்தது. ஊர்வலத்தின் ஒரு பகுதியினர் வழியில் இருந்த சில கடைகளைச் சூறையாடவும் செய்தனர்.

அடுத்த இரு வருடங்களிலும் கூட மிலாது நபி ஊர்வலத்தின் போதும் சரி, விநாயகர் சதுர்த்தி ஊர்வலத்தின் போதும் சரி, திருவல்லிக்கேணிவாசிகள் மட்டுமல்ல, சென்னை நகர மக்கள் அனைவருக்குமே டென்ஷன்தான். மண்டை பிளப்பது போன்ற இந்தத் தலைவலியைத் தவிர்க்கும் நோக்கில், மதநல்லிணக்க அமைப்பு, ''இவ்வருடமும் சரி, எதிர்காலத்திலும் சரி, மதசம்பந்தமான மிலாது நபி மற்றும் விநாயக சதுர்த்தி ஊர்வலங்களைத் தடைசெய்ய வேண்டும்'' என்று கருத்துத் தெரிவித்தது.

கோபாலன் என்பவர், இவ்விரு மத ஊர்வலங்களுக்கும் தடை விதிக்க வேண்டும் என்று சென்னை உயர்நீதிமன்றத்தில் ஒரு வழக்கும் தொடர்ந்தார். நீதிபதி பக்தவத்சலம், இந்த வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார். ''சென்னை நகரில் கூட்டங்களோ, ஊர்வலங்களோ நடத்துவதற்குரிய அனுமதி, சட்டப்படி மாநகர போலீஸ் கமிஷனரால் வழங்கப்படுகிறது. அதில் நீதிமன்றம் தலையிட்டு, ஊர்வலங்களைத் தடை செய்ய

முடியாது'' என்று அவர் தமது தீர்ப்பில் குறிப்பிட்டார்.

''இந்த மத ஊர்வலங்களைச் சேப்பாக்கம், திருவல்லிக்கேணி ஆகிய பகுதிகள் வழியே அனுமதிக்க வேண்டாம்'' என்று சர்வ கட்சியினரும் கோரிக்கை விடுத்தனர். ''இந்த ஊர்வலங்களின் போது சில சமூக விரோத சக்திகள் புகுந்து கலவரம் செய்வதால் எங்கள் வியாபாரத் தலங்களுக்கும், உயிருக்கும், உடைமைக்கும் கடுமையான பாதிப்புகள் ஏற்படுகின்றன,'' என்று அப்பகுதி வியாபாரிகளும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

இவற்றைக் கருத்தில் கொண்ட முதல்வர், மத நல்லிணக்கம், பொது அமைதி இவற்றைக் கருதி இவ்வாண்டு மிலாது நபி மற்றும் விநாயகர் சதுர்த்தி தொடர்பான ஊர்வலங்கள், பொது இடங்களில் கூட்டுத் தொழுகை ஆகியன வேண்டாம்'' என்று வேண்டுகோள் விடுத்தார். வேண்டுகோளை ஏற்று மிலாது நபி கமிட்டியினர் இவ்வாண்டு ஊர்வலம் நடத்தவில்லை. அதற்குப் பதில் அனைத்து மதத் தலைவர்களும் பங்கேற்கும்படியாய், மத நல்லிணக்க மாநாட்டுக்கு ஏற்பாடு செய்தனர்.

இந்து முன்னணியோ, 'வழக்கம் போல இவ்வாண்டும், விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் நடத்துவோம்' என்று அறிவித்துள்ளது. இதன் மாநில அமைப்பாளரான ராம கோபாலனைச் சந்தித்தோம்: ''மிலாது நபி ஊர்வலம் ரத்து செய்யப்பட்டுவிட்ட காரணத்தால், விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் கைவிடப்பட வேண்டிய அவசியமில்லை. காரணம், இவை இரண்டும் ஒன்றுக்கொன்று போட்டியானவை அல்ல'' என்கிறார் இவர்.

''கோவில்களில் தேர்த் திருவிழா, சுவாமி வீதி உலா, காவடி, தீர்சட்டி ஊர்வலங்கள், பஜனை ஊர்வலம் இவையெல்லாம் இந்துக்களின் பாரம்பரியத்துடன் சம்பந்தப்பட்ட விஷயங்கள். பல நூற்றாண்டுகளாக நடந்து வருபவை. இந்தியா முழுக்க விநாயகர் சதுர்த்தியின் போது ஊர்வலங்கள் நடந்து வருகின்றன. ஆந்திரா, குஜராத், மகாராஷ்டிரா, மேற்கு வங்காளம், பீகார் ஆகிய மாநிலங்களில் எத்தனையோ அசம்பாவிதங்கள் நடைபெற்ற போதிலும் ஊர்வலங்கள் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. அவற்றைத் தடை செய்ய வேண்டுமென்று எவரும் சொல்லவில்லை. இங்கே இந்துக்கள் சம்பந்தப்பட்ட அனைத்தையும் வெறுக்கும் அறிவுஜீவிகள் சிலர் உண்டு. விநாயகர் சதுர்த்தியின் போது, ஊர்வலம் கூடாது என்று பிரசாரம் செய்வது இவர்களுக்கு வாடிக்கை.

''ஊர்வலங்களின் போது, எவராவது கலாட்டா செய்தால், அவரைப் பிடித்து உள்ளே வைத்துவிட்டு, ஊர்வலம் தொடர வேண்டும் என்றுதான் சட்டம் சொல்கிறது. மூட்டைப்பூச்சிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்துவது போல நாம் நடந்து கொள்ளக் கூடாது.''

''ஊர்வலம் போகிறீர்கள். சரி, அது ஏன் குறிப்பாக மசூதி இருக்கும் பகுதி வழியாகத்தான் போக வேண்டும் என்று கூறுகிறீர்கள்?''

''மசூதி இருக்கிற பகுதியில், இந்துக்கள் ஊர்வலம் போகக் கூடாது என்று ஏதாவது சட்டம் இருக்கிறதா? அப்புறம் ஏன் ரூட்டை மாற்றிக் கொள்ள வேண்டும்?

**அடிப்படையில் தேவையானது, ஒருவரை ஒருவர் மதித்து நடப்பதுதான். இந்துக்கள் ஊர்வலம் செல்வதை இஸ்லாமியர்கள் எதிர்க்கவும் கூடாது. அதேசமயம் ஊர்வலம் செல்லும் இந்துக்கள் மசூதி முன் நின்று மணிக்கணக்கில் டமார மடிக்கவும் கூடாது. இதை மீறுவதால் தான் இருதரப்பினருக்குமே பிரச்னையாகிறது.**

மகோபாலன்



● பொன். பரமகுரு



# 12 ஆ? 17 ஆ?



● முகமது நபியின் பிறந்த நாள்தான் ஆண்டு தோறும் மிலாது நபியாகக் கொண்டாடப்படுகிறது.

● இஸ்லாமியர்களில் ஷியா பிரிவினர் இஸ்லாமிய ஆண்டின் ரபியல் அவல் பதினேழாம் தேதி மிலாது நபியைக் கொண்டாடுகிறார்கள்.

● சன்னி பிரிவினர் கொண்டாடுவது அதே மாதத்தில் பன்னிரண்டாம் தேதி.

● இருவேறுபட்ட தினங்களில் கொண்டாடப்படுவதற்குப் பதிலாய், பன்னிரண்டாம் தேதி முதல் பதினேழாம் தேதி வரையிலான நாட்கள் விழாக் காலமாகக் கருதப்படுகிறது.

● முஸ்லிம்களுக்கிடையே ஒற்றுமையையும், அமைதியையும் நிலைநாட்டுவதே மிலாது நபியின் நோக்கம்.

● மிலாது நபியையொட்டி, சொற்பொழிவுகள், ஊர்வலங்கள், புத்தகக் கண்காட்சிகள் ஆகியவற்றுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

● புத்தாடை அணிந்து, இனிப்புகள் செய்து தாமும் உண்டு, பிறருக்கும் கொடுத்து இஸ்லாமியர்கள் மகிழ்வார்கள்.

குலாம் அகமது அஸ்காரி

சொல்லக் கேட்டவர் : ஜூலி

மசூதி இருப்பதனாலேயே, அந்தப் பகுதியை 'சென்சிடிவ் ஏரியா' என்று சொல்கிற வாதமும் முறையல்ல. அசம்பாவிதம் ஏதும் நிகழலாம் என அரசு நினைத்தால், அதிகப்படியான பந்தோபஸ்துக்கு ஏற்பாடு செய்து நிலைமையைச் சமாளிப்பதுதான் தீர்வு.''

இஸ்லாமியர்களைப் பொறுத்த வரை, மசூதிக்கு முன்னால் மேளம் கொட்டி ஆடிப் பாடுவது ஒரு கேலிக்கை மட்டுமல்ல, இஸ்லாமியர் ஒருவர் அப்படிச் செய்தால் அது தண்டனைக்குரிய குற்றமும் ஆகும்.

ஆயிரம் விளக்கு மசூதியின் தலைமைக் காஜி குலாம் அகமது அஸ்காரி சொல்கிறார் : ''மாற்று மதத்தவர் மசூதிக்கு முன்னால் மேளம் கொட்டிக் கொண்டு ஊர்வலம் செல்வதைத் தடுக்க முடியாது. இந்த விஷயத்தைப் பொறுத்தவரை அடிப்படையில் தேவையானது, ஒருவரை ஒருவர் மதித்து நடப்பதுதான். இந்துக்கள் ஊர்வலம் செல்வதை இஸ்லாமியர்கள் எதிர்க்கவும் கூடாது. அதேசமயம் ஊர்வலம் செல்லும் இந்துக்கள் மசூதி முன் நின்று மணிக்கணக்கில் டமாரமடிக்கவும் கூடாது. இதை மீறுவதால்தான் இருதரப்பினருக்குமே பிரச்னையாகிறது.

''முஸ்லிம்கள், தொழுகையில் ஈடுபட்டிருக்கும் சமயத்தில், டமாரமடித்துக் கொண்டு, ஊர்வலம் சென்றால், தொழுகையின் அமைதி கெடுமல்லவா? இது மாதிரியான சூழ்நிலைகளில் இளைய தலைமுறையினர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டு விடுகிறார்கள். இதனால் அசம்பாவிதங்கள் நடந்துவிடுகின்றன.''

''தமிழக போலீஸ் திறமை மிகுந்ததுதான். ஆனால் அதனை முழு சுதந்திரத்துடன் செயல்பட விடாத காரணத்தால்தான், மத ஊர்வலங்களின் போது அசம்பாவிதங்கள் ஏற்பட்டு விடுகின்றன'' என்று குற்றம் சாட்டுபவர், ஓய்வு பெற்ற உயர் போலீஸ் அதிகாரி பொன். பரமகுரு.

''மத ஊர்வலங்களைத் தடை செய்வது என்பது அவசியம் இல்லாத ஒன்று. அதனால் வேண்டாத பிரச்னைகள்தான் வரும். ஆனால் மத ஊர்வலங்கள் விஷயத்தில், போலீஸ் மிகவும் திறமையான முறையில் திட்டமிட்டுச் செயல்பட வேண்டும். இருதரப்பினரையும் முன்கூட்டியே அழைத்துப்

● கலவரவலையில் போலீஸ்!



# கங்கை புத்தக நிலையம் வழங்கும் சிறந்த நூல்கள்

| | ரூ. பை. |
|---|---|
| **முக்தா வி. சீனிவாசன்** | |
| தமிழ்த் திரைப்பட வரலாறு | 100.00 |
| **வி.வி.வி. ஆனந்தம்** | |
| மக்கள் வாழ்வில் மரங்கள் | 85.00 |
| **டி. ஆர். கள்ளப்பிரான்** | |
| வெற்றிக்கு வழிகாட்டும் மேலாண்மை | 65.00 |
| **அ.ச. ஞானசம்பந்தன்** | |
| கம்பன் புதிய பார்வை (சாகித்ய அகாதமி பரிசு பெற்ற நூல்) | 50.00 |
| திருக்குறள் பரிமேலழகர் உரை | 50.00 |
| **செந்துறை முத்து** | |
| திருக்குறள் தெளிவான உரை (கையடக்கப் பதிப்பு) | 10.00 |
| **எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்** | |
| நாலடியார் விரிவுரை தமிழ் - ஆங்கிலம் | 25.00 |
| **டாக்டர். என். ஸ்ரீதரன்** | |
| ஹிந்தியில் பேசுவது எப்படி? | 30.00 |
| உரை அலைகள் | 20.00 |
| **கண்ணதாசன்** | |
| சினிமாச் சந்தையில் 30 ஆண்டுகள் | 10.00 |
| ஒரு பெண்ணின் கதை | 20.00 |
| **இராம. கண்ணப்பன்** | |
| கண்ணதாசனிடம் கண்டதும் - கேட்டதும் | 30.00 |
| **வாண்டுமாமா** | |
| நீங்களே செய்யலாம் (படங்களுடன்) | 30.00 |
| க்விஸ் க்விஸ் | 40.00 |
| பச்சைப் புகை | 16.00 |
| **சுபலட்சுமி** | |
| சமைத்துப் பாருங்கள், ருசித்துப் பாருங்கள் | 25.00 |
| **சரஸ்வதிராம்நாத்** | |
| இந்திய சமையற்கலை - I | 25.00 |
| இந்திய சமையற்கலை - II | 25.00 |

## நாவல், சிறுகதை, சிறுவர் நூல்கள்

| | ரூ. பை. |
|---|---|
| **கோவி. மணிசேகரன்** | |
| நாகநந்தினி (சரித்திர நாவல்) | 47.00 |
| முடிசூட்டு விழா | 34.00 |
| பொய்ச் சேவல் | 14.00 |
| **வாசவன்** | |
| சிவப்பு இதயங்கள் | 26.00 |
| **பி.வி.ஆர்.** | |
| பூப்பந்தல் | 30.00 |
| முற்றத்து முல்லைகள் | 30.00 |
| காயாத நிலவுகள் | 11.00 |
| இளம் சருகுகள் | 28.00 |
| **ராஜகுரு** | |
| பெண்மனம் ஒரு பூவனம் | 22.00 |
| **க. சமுத்திரம்** | |
| சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால் | 26.00 |
| **ராகி. ரங்கராஜன்** | |
| புரொபசர் மித்ரா | 32.00 |
| உன்னேன் அம்மா | 14.00 |
| **ஜோதிர்லதா கிரிஜா** | |
| வெகுளிப் பெண் | 25.00 |
| **கங்கா ராமமூர்த்தி** | |
| முள்ளில் ஒரு மலர் | 36.00 |
| **வேதா கோபாலன்** | |
| இனி இது வசந்த காலம் | 36.00 |
| **அமுதா கணேசன்** | |
| வெண்ணிலாவும் வானும் போலே | 27.00 |
| **உத்தமசோழன்** | |
| தொலைதூர வெளிச்சம் | 34.00 |
| **முகிலன்** | |
| நினைவாலே சிலை செய்து | 20.00 |
| **சம்பந்தம்** | |
| பஞ்சதந்திரக் கதைகள் | 20.00 |
| தெனாலிராமன் கதைகள் | 18.00 |
| **ரா. கண்ணன் மகேஷ்** | |
| சொர்க்கத்தின் கதவுகள் | 14.00 |
| **ரா. பாலகிருஷ்ணன்** | |
| கோயில் மணிஓசை | 22.00 |

* தேவையான பிரதிகளை வி.பி.பி. மூலம் பெற கடிதம் எழுதுங்கள்.
வி.பி.பி. தபால் செலவு தனி.

* புத்தக வியாபாரிகளுக்கும், பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கும் தக்க கழிவு தரப்படும்.

★ கங்கையின் இலவச புத்தக விலைப்பட்டியலுக்கு எழுதுங்கள்.

விவரங்களுக்கு :



**கங்கை புத்தக நிலையம்,**
13, தீனதயாளு தெரு,
தி.நகர்., சென்னை - 600 017.



"நாளைக்கு எனக்குப் பண்ணப் போற ஆபரேஷனைப் பத்தி ஒரு சந்தேகம், டாக்டர்!"

"விட்டுத் தள்ளுங்க, எனக்கே நிறைய சந்தேகமிருக்கு!"

- ஞா. ஞானமுத்து

பேசி, சமாதானமான முறையில் ஒருவரது உணர்வுகளை மற்றவர் புரிந்து கொண்டு, ஊர்வலங்களை நடத்திட வழிசெய்ய வேண்டும். போலீஸின் உளவுப் பிரிவு முடுக்கி விடப்பட வேண்டும். ஊர்வலம் செல்லவிருக்கும் பாதையில் ஏதாவது அசம்பாவிதங்களை ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளதா என்று புலனறிந்து, முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். போலீஸின் எண்ணிக்கையைப் போதிய அளவுக்கு அதிகரிக்க வேண்டியது மிகவும் அவசியம்."

மத ஊர்வலங்களைத் தடை செய்வது குறித்து, அனைத்துத் தரப்பினரும் கூறும் கருத்துக்களைக் கேட்ட பிறகு நமக்குத் தோன்றுவது இதுதான்: மத நல்லிணக்கம் உருவாகப் பாடுபட வேண்டும்தான். கூடவே, அசம்பாவிதங்களைத் தவிர்க்கவும் தயாராக வேண்டும். ஜனநாயக அமைப்பில், எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் அரசு, மத ஊர்வலங்களைத் தடை செய்ய முடியாது. ஆனால் கட்டுப்படுத்துவது சாத்தியமே.

கலவரம் மூளக் கூடிய பகுதிகளில் ஊர்வலத்தை நடத்திச் செல்ல அனுமதிக்காமல், மாற்றுப் பாதையில் செல்ல வற்புறுத்தலாம். இதில் காலஞ்சென்ற போலீஸ் கமிஷனர் துரை உறுதியாக இருந்து ஒரு முறை பெருவெற்றி பெற்றார். அடுத்து, ஊர்வலத்தில் கலந்து கொள்வோரின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்துவது. 'இருநூறு பேர் அல்லது முந்நூறு பேருக்கு மேல் ஊர்வலத்தில் வரக்கூடாது; அதற்குமேல் எனில் போக்குவரத்து பாதிக்கப்படும், பொதுமக்களுக்கு அசௌகரியம் ஏற்படும்; போலீஸாரால் போதிய அளவு பாதுகாப்பு அளிக்க முடியாமலும் போகும்' என்று கட்டுப்படுத்தலாம். இதனை எதிர்த்து வழக்குப் போட்டு யாராலும் வெற்றி பெற முடியாது. கும்பல் குறைந்தாலே பிரச்னையின் பெரும்பகுதி குறைந்தது போல் தானே?

இந்த வருட விநாயகர் சதுர்த்தி ஊர்வலம் மிகுந்த பரபரப்புக்கிடையே ஏற்பாடாகியிருக்கிறது. கடலில் கரைவதற்காகப் பிள்ளையார் கலர் கலராய் உருவாகி வருகிறார்.

நீலக்கடலுக்கு சிவப்புச் சாயம் பூசுவதும் பூசாததும் அரசின் கையில்தான் இருக்கிறது!

- எஸ். சந்திரமௌலி

மேலட்டை வண்ணப்படம் :
இரா. கிருஷ்ணமூர்த்தி

படங்கள் : டி. ராமமூர்த்தி

## கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

## ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகை

இவ்வாண்டு ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகையாக ரூ. 40,000 வழங்கப்போகிறோம் என்று அறிவித்திருந்தோம். வந்து சேர்ந்த ஏராளமான விண்ணப்பங்களைக் கவனமுடன் பரிசீலித்து, படிப்பில் சிறந்த, ஆனால் பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்களைத் தேர்ந்தெடுத்ததில் எதிர்பார்த்ததற்கும் அதிகமாகவே பலர் தகுதி பெற்றிருந்தனர். எனவே, மொத்த உதவித் தொகையை அறங்காவலர்கள் ரூ. 44,000 ஆக உயர்த்தி விட்டனர். தேர்ந்தெடுக்கப்பட்ட அனைத்துப் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கும் உதவித் தொகைகள் அனுப்பப்பட்டு விட்டன.

கி. ராஜேந்திரன்,
(நிர்வாக அறங்காவலர்)

சேமிப்பு ★ பாதுகாப்பு ★ செழிப்பு



# ஸ்ரீ ஜெயதுர்கா

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

91, அரண்மனைகாரத் தெரு, சென்னை - 1. Ph : 5223886
(ஸ்ரீகாளிகாம்பாள் கோயில் பின்புறம்)

**பிக்சட் டிபாசிட்டுக்கு 20% வரை வட்டி**
**வைப்புத் தொகை 45 மாதங்களில் இரு மடங்காகிறது**

### சௌபாக்யா மங்கையர் நலத்திட்டம்

வைப்புத் தொகை ரூ 5,000/- கால அளவு 1 வருடம் 19.5% p.a. மாத வட்டி

### அக்ஷயா டிபாசிட்

ரூ 6,000/- செலுத்தி 15 வருடங்களில் ரூ 1,00,000/- பெறலாம்.

### பென்ஷனர் நலத்திட்டம்

வைப்புத் தொகை ரூ 10,000/- கால அளவு 1 வருடம் 19.5% p.a. மாத வட்டி
இத் திட்டத்தின் கீழ் ஓய்வூதியம் பெறுவோர், முதியோர்,
உடல் ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளைகள் பயன்பெறலாம்.

### ரெக்கரிங் டிபாசிட்

மாதம் ஒன்றுக்கு ரூ 25/-ம் அதன் மடங்குகளும் பெற்றுக் கொள்ளப்படும்.

| மாதம் செலுத்தும் தொகை ரூ 100 | முடிவில் பெறும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| | 1,320 | 2,900 | 4,800 | 7,220 | 10,040 | 13,460 | 17,592 |

மற்றும் பல சிறப்புத் திட்டங்கள்

### துரித நகைக்கடன் மற்றும் அடமானக் கடன்

தங்க நகைகள் பேரில் கிராம் 1-க்கு ரூ. 300/- சென்னை மாநகரிலுள்ள
அசையாச் சொத்துக்கள் பேரிலும் கடன். மாத வட்டி விதம் ரூ 1.85.

S. கோபால கிருஷ்ணன்
நிர்வாக இயக்குநர்
(DGM (Retd). சென்ரல் பாங்க் ஆப் இந்தியா)

P.R. சுப்பிரமணியன்
இயக்குனர் குழுத் தலைவர்
(வர்த்தகம்)

இயக்குனர்கள்

N. பாலசுப்பிரமணியம்
S. ஆலால சுந்தரம்
K. பாலசுப்பிரமணியம்

P.S. ருத்ரகுமார்
திருமதி கோமதி சுந்தரம்
P.S. ராஜசேகரன்

அலுவல் நேரம் : 8.30 a.m. to 12.30 p.m & 2 p.m. to 5.30 p.m.
ஞாயிறு 8.30 a.m. to 12.30 p.m.

செவ்வாய் விடுமுறை

பங்குதாரர்களுக்கு மட்டும்

# கல்லூரித் தேர்தல்கள்: கலாட்டாவுக்கு டாட்டா?

தாரை தப்பட்டை, முன்னால் லக்ஷ்மி வெடி, திறந்த ஜீப், மாலையோடு கரம் கூப்பி வேட்பாளர்.

பேனர்கள், சைஸ் வாரியாய் துண்டுப் பிரசுரங்கள், போஸ்டர்கள்.

எல்லாம் கல்லூரி பேரவைத் தேர்தலுக்குத்தான்!

இதன் பின் தூள் பரத்தும் உறுதி மொழிகள். பிட்டாய்கள் பின்செய்த விசிட்டிங் கார்டுகள். அனைவரையும் கவர லஸ்ஸி, சமோசா, பால் பாயிண்ட், பைல், கீ செயின் 'அன்பளிப்பு'!

சில தருணங்களில் சாப்பாடு, 'தண்ணி', அடியாட்கள் ஆகியவையும் உண்டு. அரசியல் கட்சிகளின் ஆசி வேறு.

''இனி இதெல்லாம் கிடையாது'' என்கிறது அரசு.

மாணவர்கள் என்ன நினைக்கிறார்கள்?

''எதுக்கு இதெல்லாம்? எலக்ஷன் ஒரு காலேஜ் விஷயம். அதுக்கு எதுக்கு போஸ்டர், பேனர் எல்லாம் வெக்கணும்? அதுவும் வெளியே? தேவையேயில்லை. போஸ்டர், பேனர் வந்தா, கூடவே பாலிடிக்ஸும் வந்துடும். அப்புறம் அவ்ளோதான். காலேஜே உருப்பட்டா மாதிரிதான்!'' - குருநானக்கின் ராம் கணேஷ் சொல்லும் போது, கேட்டுக் கொண்டிருந்த கவில் குமார் குறுக்கிட்டார் :

''போஸ்டர் வேணும் சார்... உதாரணமா முந்தா நாள் நாள் லீவு. அன்னிக்கு எலக்ஷன் கேன்வாஸ் பண்ணியிருக்காங்க. நேத்திக்குப் போனா எலக்ஷன். பேரெல்லாம் பார்த்தா யாருன்னே தெரியலை. போஸ்டருங்க இருந்திருச்சின்னா யாருன்னு தெரிஞ்சிருக்குமில்ல?''

''ரயில், பஸ் எல்லாவற்றிலும் அதை ஒட்ட வேண்டுமா?''

''பின் எப்படி தெரியும்? ஃபுட்போர்ட் அடிச்சிக்கினு வரும் போது, அதைப் படிச்சிக்கினே வருவோம் இல்ல?''

சுபி. கிஷோர் குமார்

சர். தியாகராஜா என்ன நினைக்கிறது? சமீபத்தில் இங்கு தேர்தல், கொண்டாட்டங்களோடு முடிந்திருக்கிறது.

''கிளாஸ் கான்வாசிங் இங்க ஓர்க் அவுட் ஆகாது. டீக்கடையில், தியேட்டர்ல எங்கையாச்சும் பசங்க இருப்பாங்க. அவங்க கிட்ட மொத்தமா ஒரு நியூஸ் போய்ச்சேர ணும்னா போஸ்டர், பேனர் எல்லாம் தேவைதான். ஒருத்தன் ஒருத்தனா போய் சொல்லிட்டிருக்க முடியாதுல்ல? அதுவும் இல்லாம பாப்புலாரிடி வேணுமில்ல? நாளைக்கு பாலிடிக்ஸ"க்கு வரணும்னா, டிரெய்னிங் வேணுமே!'' - எஸ். கோபா லனின் கருத்து இது.

மற்றொரு பெயர்போன கல்லூரி புதுக் கல்லூரி. பண பலம் எக்கச்சக்கம். அதனால் போட்டியும் பலம். பி. கிஷோர் குமார் பேசுகிறார்:

''ஜாலிக்குத்தானே சார்! காலேஜ் லைஃப்ல இதெல்லாம் கண்டிப்பா வேணும். வேணா, பாலிடிக்ஸ் உள்ள வரக் கூடாதுன்னு சொல்லலாம். நாங்க என்ஜாய் பண்றத ஏன் கெடுக்கணும்?''

**''ஃபுட்போர்ட் அடிச்சிக்கினு வரும் போது, அதைப் படிச் சிக்கினே வருவோம் இல்ல?''**

இவர் சொன்ன கதை சுவாரஸ்யமானது. தேர்தலில் நிற்கும் பையன் தன் போஸ் டரை, லேடீஸ் காலேஜ் ஒன்றின் வாசலில் ஒட்டிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்து, அந்தப் பக்கமாய் வந்த பேராசிரியர் கேட்க, ''இதப் பாக்கற பொண்ணுக்கு இன்னொரு பிரண்ட் இருக்கும். அதுக்கு நம்ம காலேஜ் பையன் லவ்வரா இருப்பான். அதனால ரெண்டு மூணு வோட்டு விழுந்தாலும் விழும் சார்!''

எஸ்.ஐ.வி.ஈ.டியின் ஆர். மதுசூதன னிடம் கேட்க, ''எங்க காலேஜ் வரைக்கும் வேணான்னுதான் சொல்வேன். வீணா பேரு கெடுது. காலேஜ் உள்ளே மட்டும் கேன்வா சிங் இருந்தா போதும். வோட்டுப் போடப் போறது நமக்குத் தெரிஞ்ச பசங்கதான்.

பச்சையப்பனின் விளக்கம் என்ன? அறிந்து வரப் போனால், ஆச்சர்யம், ஒரு கொண்டாட்டம் இன்றித் தேர்தல் முடிந்தி ருந்தது! எல்லாம் 'பிரின்ஸி'யின் சாணக்கி யம். தேர்தல்களில் நின்றவர்கள் அனைவ ரையும் அழைத்து, வாரியத் தலைவர் கள், மந்திரி பதவி போன்று, ஒரு சேர் மன், இரண்டு வைஸ் சேர்மன், ஒரு ஜென ரல் செகரட்டரி, இரண்டு ஜாய்ன்ட் செகரட்டரி, ஒரு பொருளாளர், ஒரு கல்சுரல் செகரட்டரி என்று பதவிகளைப் பகிர்ந்தளித்து விட் டார்! எல்லோருக்கும் சந்தோஷம்! மேலும் விசாரித்ததில், எதிர்ப் பாளர்கள் ஆறு பஸ் களின் கண்ணாடி களை மட்டுமே பதம் பார்த்ததாகச் சொல்கி றார்கள்!

அம்மணிகள் என்ன நினைக்கிறார் கள்? ஜி.எஸ்.எஸ். ஜெயினின் மாணவி, அனுஜா பொரிந்து தள்ளி விட்டார்: ''லேடீஸ் யாராவது பாலிடிக்ஸ்ல ஃபேமஸா இருக் காங்களா, பாருங்க. பெரியாளுங்கள உட் டுடுங்க. சாதாரணமா யாராவது டெவலப் ஆகி இருக்காங்களா? இல்லவே இல்லை! காரணம், லேடீஸ் காலேஜ்ல எலெக் ஷனே இல்ல! பிரின்ஸி, ஒருத்தர் ஒருத்தரா கூப்பிட்டு, இவ செகரட்டரி, இவ சேர்மன்ம்பாங்க. அத் தோடு சரி. அந்தப் பொண்ணுங்கள பின் னால பார்க்கவே முடி யாது. ஆக்டிவா எதி லயும் பங்கெடுத்துக்க மாட்டாங்க. அதுக்குத்தான் எலக்ஷன் வேணும். கேன்வாசிங் வேணும். காலே ஜுக்கு வெளிய தெரியணும்னு சொல்ல மாட்டேன். காலேஜ் உள்ளயாவது நம்மள தெரிஞ்சிருக்கணும் இல்ல? அப்பத்தான பின்னால பாலிடிக்ஸ்ல தைரியமா ஈடுபட முடியும்!''

- துளசி

புகைப்படங்கள் : கோபிநாத்


* ராம்கணேஷ்


* அனுஜா


* எஸ். கோபாலன்


* மதுசூதனன்


* கிஷோர் குமார்

# நாடகத் துறையே, நலமா?

சமீபத்தில் கோமல் சுவாமிநாதன் வெகு விமரிசையாக நவீனமும், அநவீனமும் கலந்தாற்போல ஒரு நாடக விழாவை வெற்றிகரமாக நடத்தி முடித்திருக்கிறார். ராணி சீதை மன்றத்தில் எஸ்.வி. சேகரின் நகைச்சுவை நாடக விழாவில் ஏசி இல்லாவிட்டாலும் கும்பல் பறக்கிறது! இன்னொரு பக்கம் பாம்பே சாணக்யா சப்தம் போடாமல் ஒரு நாடகப் புரட்சி பண்ணிக் கொண்டிருக்கிறார். பிறிதொருபுறம் நாரதகான சபாவில் வாரம் தோறும் வியாழன் அன்று ஞாநி, பரீட்சார்த்த நாடகங்கள் நடத்துகிறார். இதையெல்லாம் பார்க்கும் போது, கொஞ்ச நாள் முன்பு வரை கூட நாடகத் துறையிலிருந்த தொய்வு நீங்கி விட்டிருப்பது போல பிரமை தட்டுகிறது. இது உண்மைதானா? எனில், எந்த அளவுக்கு வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது? நாடகத் துறையில் பழம் தின்று கொட்டை போட்டுக் கொண்டிருக்கிற சிலரிடம் இது பற்றிக் கேட்டோம்.

● எஸ். வி. சேகர்

● ஞாநி



“இன்று புதிய நாடகங்களின் விளம்பரங்கள் நிறைய வருகின்றன. ஆங்காங்கே போஸ்டர் புரட்சி நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் அத்தனை நாடகங்களும் ஒரு முறை மேடை ஏறுவதோடு சரி. அப்புறம் காணாமல் போய் விடுகின்றன. கவனித்துப் பார்த்தால் திரும்பத் திரும்ப 2, 3 குழுக்கள் மட்டுமே தொடர்ந்து நாடகம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். புதிய நாடகங்களின் அறிவிப்புகளைப் பார்த்து, வளர்ச்சி வந்து விட்டதாகக் கருதி விட முடியாது. எத்தனை நாடகங்கள் பரத நாட்டிய அரங்கேற்றம் மாதிரி அப்பா, அம்மா அண்ணன், தங்கை ஆடியன்ஸோடு மட்டும் நடைபெறுகின்றன தெரியுமா? ஆனால் பிரபலமான குழுக்

களுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. அதுவும் இப்போதெல்லாம் நாடகங்களை, பிரபல நிறுவனங்கள் Sponsor பண்ணுகிறார்கள். பப்ளிஸிட்டி அதிகம் கிடைக்கிறது. ரசிகர்களை எந்த அளவுக்கு நாம் 'என்டர்டெயின்' பண்ணுகிறோமோ அந்த அளவுக்கு நமது நாடகம் பிரபலமாகின்றது. நீதி போதனைகளும், வரட்டு நவீனங்களும் இங்கு போணி ஆகிறதில்லை.

''சமீபத்தில் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் சார்பில் ஒன்பது புதிய நாடகங்கள் அரங்கேறின. என்ன பிரயோஜனம்? பாம்பே சாணக்யாவின் நாடகம் மட்டும்தான் பேசும்படி அமைந்திருந்தது. மற்றதெல்லாம் எங்கே போயிற்று?

''எதற்குச் சொல்கிறேன் என்றால் மக்கள் போன வருஷம் வரையிலும் இருந்ததைவிட இந்த வருஷம் அதிக ஆர்வம் கொண்டு நாடகங்களுக்கு வர ஆரம்பித்திருக்கிறார்கள். வருபவர்களைப் பிடித்து வைத்துக் கொள்ளும்படியான நாடகங்கள் தான் குறைவாக இருக்கின்றன'' என்கிறார் எஸ்.வி. சேகர்.

''மக்களுக்குத் தேவையான பொழுது போக்கைத் தர டி.வி. தவறிவிட்டது. சினிமாக்களும் ஒன்றிரண்டு தவிர எதுவும் பார்க்கும்படியாக இல்லை. எனவே மக்கள் பார்வை நாடகத்தின் பக்கம் திரும்பியிருப்பது இயற்கையே'' என்கிறார் கார்த்திக் ராஜகோபாலன். (கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ்.)

''நாடக ஆசிரியர்களும், புதிய குழுக்களும் நிறைய வந்துள்ளன. எல்லாமே சிறப்பான நாடகங்களாக வருகின்றன என்று சொல்ல முடியாது. பத்துக்கு ஒன்று நன்றாக இருந்தாலே வெற்றி தான்.''

''நவீன நாடகங்கள் எனப்படும் பரீட்சார்த்த நாடகங்களுக்கு ரசிகர்களின் ஆதரவு எப்படி இருக்கிறது?''

''சுத்தமாக இல்லை. நவீன நாடகம் போடுகிறவர்கள் தனித்தனிக் குழுக்களாகச் செயல்படுகிறார்கள். அந்தந்தக் குழு ரசிகர்கள், அனுதாபிகள் மட்டும்தான் அவர்களின் ஆடியன்ஸ். பரீட்சார்த்த நாடகங்கள் இன்னும் சரியான முறையில் மக்களுக்கு அறிமுகமாகவில்லை என்றே சொல்வேன்'' என்கிறார் இவர்.

ஆனால், ஜோல்னாப் பையர்களிடமும், அறிவு ஜீவிகளிடமும் மட்டுமே பரிச்சயமாகி இருந்த நவீன நாடகங்கள், மாக்ஸ் முல்லர் பவன் - அல்லியான்ஸ் பிரான்கைஸ் புல்வெளி தாண்டி, நகரின் மைய நாடக அரங்குகளை எட்டியிருப்பதை வளர்ச்சி

''இன்று புதிய நாடகங்களின் விளம்பரங்கள் நிறைய வருகின்றன. ஆங்காங்கே போஸ்டர்புரட்சி நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் அத்தனை நாடகங்களும் ஒருமுறை மேடை ஏறுவதோடு சரி. அப்புறம் காணாமல் போய்விடுகின்றன.''



* திருப்பூர் கிருஷ்ணன்



* கார்த்திக் ராஜகோபால்

என்றே கொள்ள வேண்டும்!

''ராணிசீதை அரங்கிலோ, ஆர்.ஆர். சபாவிலோ எத்தனையோ சபா நாடகங்களுக்குக் கூட 40-50 பேர் மட்டுமே பார்வையாளராக வந்திருக்கின்றனர். எனவே, சபா நாடகங்களுக்குத்தான் கும்பல் அதிகம், நவீன நாடகங்களுக்கு ரசிகர்கள் குறைவு என்கிற வாதமே தப்பு. அங்கேயும் காமெடி நாடகங்களுக்கு மட்டும்தான் அதிக வரவேற்பு. நவீன நாடகங்களைப் பொறுத்தவரை கருத்திலும் வடிவத்திலும் புதுமைகள் பல செய்கிறார்கள். கூடிய சீக்கிரம் இவற்றிற்கும் மிக நல்ல வரவேற்பு கட்டாயம் வரும்'' என்கிறார் பரீக்ஷா ஞாநி.

''சென்னையைக் காட்டிலும் தஞ்சாவூரிலும், பாண்டிச்சேரியிலும் நவீன நாடகங்களுக்குக் கூடுதல் வரவேற்பு இருக்கிறது. காரணம், அந்த ஊர்ப் பல்கலைக் கழகங்களில் நாடகத்துறை ஆற்றியிருக்கிற பணிதான். முழுக்க முழுக்க பெண்கள் பிரச்னைகளை முன்வைத்து, பெண்களாலேயே நடத்தப்படும் 'பூமிகா' நாடகக் குழு சமீபத்தில் உருவாகி இருக்கிறது. இதெல்லாம் வளர்ச்சி தானே?''

பாரபட்சமற்ற நாடக விமர்சனம் எழுதி வரும் 'தினமணி' திருப்பூர் கிருஷ்ணன் சொன்னார்: ''தரம் எல்லா நாடகங்களிலும் உயர்வாக இருக்கும் என்று சொல்ல முடியாது. சில ஓஹோ என்று புகழும்படியாக இருக்கும். சில, அதற்கு நேரெதிராக இருக்கும். ஆனால் அரைமணி, ஒரு மணி நேரத்துக்குள் ஒரு கதையை, ஒரு பிரச்னையை நாடக வடிவில் தர, நிச்சயம் திறமை வேண்டும். அரைமணியோ, ஒரு மணியோ, நாம் உட்கார்ந்து பார்த்த 'நேரம்' வீணாகவில்லை என்ற உணர்வு ஏற்பட்டால் - அதுதான் வெற்றி. இப்போதைய நவீன நாடகங்கள் பரவலாக அப்படியான உணர்வைத் தரத்தான் செய்கின்றன. அதனால் பொதுமக்கள் பார்வை ஈர்க்கப்பட்டு இருப்பதில் ஆச்சர்யமேயில்லை!''

– சாருகேசி, கிச்சா




# கல்கி



1993
செப்டம்பர் 12
மலர் : 52
இதழ் : 7
ஸ்ரீமுக
ஆவணி 27


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# நஷ்டம் 3466 கோடி!

அரசியல் சுவாரஸ்யமானது; ஆனால் பொருளாதாரம் முக்கியமானது. மக்கள் அரசியலில் காட்டும் ஆர்வத்தில் பாதியாவது பொருளாதாரத்தில் செலுத்த வேண்டும். அந்த நோக்கில் பார்க்கும்போது, 1993 மார்ச் முடிய நமது நாட்டின் அரசுடைமையான வங்கிகளில், பதினோரு பிரதான வங்கிகள் 3466 கோடி நஷ்டம் அடைந்திருப்பதைக் காண, நாம் அதிர்ச்சியடைகிறோம். "நாட்டின் பொருளாதாரம் எங்கே போய்க் கொண்டிருக்கிறது?" என்று கவலைப்படவும் செய்கிறோம்.

சாமான்யனுக்கு இது புதிராகவும் தோன்றக்கூடும். மக்களிடம் டெபாசிட்டுகள் பெறும் வங்கிகள், அவற்றுக்குத் தரும் வட்டி சராசரியில் 8 சதம் தான். வைப்பு நிதிக்கு 11 சதம் தந்தாலும் கரண்ட் அக்கௌண்ட்டுக்கு வட்டியே கிடையாது. சேமிப்புக் கணக்குக்கு 5 சதம்தான் வட்டி. ஆக மொத்தம் சராசரி எட்டு சதமே. ஆனால் கடன் கொடுக்கும் போது வங்கிகள் 18 சதத்துக்குக் குறையாமல் வட்டி வசூலிக்கின்றன. பத்து சதம் உபரியாகக் கிடைக்கிறது. 'எப்படி நஷ்டம் வரும்?' என்று பாமரன் யோசிக்கிறான்.

வங்கிகளில் டெபாசிட் செய்யப்படும் தொகையில் ஒரு கணிசமான பகுதி அரசுப் பத்திரங்களில் முதலீடாக வேண்டும். இதற்குச் சுமார் பத்து சதம் தான் வட்டி கிடைக்கும். ரிஸர்வ் வங்கியிலும் மற்ற வங்கிகள் பெருந் தொகைகளைக் கட்டாயமாகப் போட்டு வைக்க வேண்டும். இங்கும் வங்கிகளுக்குக் கிடைக்கும் வட்டி மிகக் குறைவு. இவை போக மிச்சமிருக்கும் பணத்தைத் தான் வங்கிகள் பொதுமக்களுக்கும் தொழில்களுக்கும் வட்டிக்குக் கடனாகத் தர முடியும். இதிலேயும் அரசு தலையிட்டு புறக்கணிக்கப்பட்டவர்கள், முன்னுரிமை பெறத் தகுதி உடையவர்கள், ஏற்றுமதியாளர் என்று பலரையும் சுட்டிக்காட்டி, அவர்களுக்கு முதலில் கடன் வழங்கச் செய்கிறது. இவை எல்லாவற்றிலும் அரசியல் புகுந்து விளையாடுகிறது. தவிர, ஆளும் கட்சிக்கு வேண்டப்பட்டவர்களுக்கு வங்கிகள் கைகட்டிச் "சேவை" புரிய வேண்டிய நிலை. இவ்வாறெல்லாம் கட்டுப்பாடுகளும் அரசியல் தலையீடுகளும் இருப்பதால் என்ன நிகழ்கிறது? பார்ப்போம்:

மேல் நாடுகளில், கொடுக்கப்பட்ட கடனில் சுமார் ஒரு சதம் திரும்பி வராது என்று கருதப்பட்டு அவ்வாறே வருடாந்திரக் கணக்கு அறிக்கையில் குறிக்கப்படும். அதாவது வங்கி, ஒரு சதத்துக்கு மேல் திரும்பி வராத கடன் இல்லாதவாறு பார்த்துக் கொள்ளும். அதற்கேற்ப நன்கு யோசித்து, பரிசீலித்து, தக்கவருக்கு மட்டுமே கடன் தரும். ஆனால் இந்தியாவில் அரசியல் கொள்கைகள், மற்றும் தலையீடுகள் காரணமாக, இவ்வாண்டு வங்கிகளில் திரும்பி வராத கடன் என்று கணக்கு எழுதப்பட்டது பதினைந்து சதவீதம்!

இந்நாள் வரை வங்கிகள் இந்தப் பதினைந்து சதவீதத்தையும் திரும்பி வந்துவிடும் என்றே கணக்குக் காட்டி லாபம் அடைவதாக ஒரு மாயையை உருவாக்கி வந்தன. ஆனால் சமீபத்தில் ரிஸர்வ் வங்கி இவ்வாறு செய்வதை இனி அனுமதிக்க முடியாது; திரும்பப் பெற முடியாத கடன்களை அவ்வாறே கணக்கு எழுதியாக வேண்டும் என்று உத்தரவிட்டது. அதன் விளைவுதான் அநேகமாக எல்லா அரசுடைமை வங்கிகளும் நஷ்டக் கணக்குக் காட்டும்படி ஆகிவிட்டது!

இவ்வாண்டு பட்ஜெட்டில் மத்திய அரசு வங்கிகளின் மூலதனத்தைப் பலப்படுத்த ரூ. 5700 கோடி ஒதுக்கியுள்ளது. இதில் 3466 கோடியை வங்கிகள் அடைந்துள்ள நஷ்டங்களே விழுங்கி விடப்போகின்றன! இதையெல்லாம் கடைசியில் தாங்கப் போவது, ஏற்கெனவே ஏராள வரிச் சுமையால் தள்ளாடிக் கொண்டிருக்கும் நீங்களும் நானும்தான்.

நாட்டின் பொருளாதாரம் விடுதலை பெற்றது; சுதந்திரமான போட்டா போட்டி, பொருளாதார வளர்ச்சியைத் துரிதப்படுத்தப் போகிறது என்று எதிர்பார்க்கும் வேளையில் வங்கிகளின் லட்சணம் இந்தப்படியாக உள்ளது.

பொருளாதாரத்தின் தூண்களான வங்கிகளில் ஊழல்களை ஒழித்து, அவற்றைப் பலப்படுத்த நிதி அமைச்சரும் ரிஸர்வ் வங்கியும் முழுமூச்சுடன் செயல்படாது போனால் புதிய பொருளாதாரக் கொள்கை டமாலாகி விடும்.



# அம்பானியின் கவர்ச்சி; ரிலையன்ஸின் வளர்ச்சி!

மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வரும் நிறுவனங்கள் குறித்து எழுதி ரொம்ப நாளாகி விட்டது. காரணம், பங்கு மார்க்கெட் வியாபாரம் — புதுசு, — பழசு இரண்டுமே படுத்துவிடவில்லை என்றாலும் நொண்டிக் கொண்டுதான் இருக்கிறது.

ஏராள நிறுவனங்கள் வெற்றிகரமாகச் செயலாற்றியுள்ளன; அரசும் தொழில் துறைக்கு மட்டுமின்றி முதலீட்டாளருக்கும் பல சலுகைகளைச் சமீப காலத்தில் வழங்கியுள்ளது. ஆனாலும் பங்கு மார்க்கெட் சூடு பிடிக்கவில்லை. பங்கு மார்க்கெட் ஊழல் அந்த அளவுக்கு பாதிப்பை ஏற்படுத்தி விட்டது. வங்கிகள் இந்த ஊழலில் சம்பந்தப் பட்டிருப்பது, லஞ்சக் குற்றச்சாட்டுக்கள் முதலியன தவிர, கணிசமாக நஷ்டமடைந்த பங்குதாரர்களைக் கண்டும் மக்கள் மிரண்டு போயிருக்கின்றார்கள். பங்கு மார்க்கெட் பக்கம் தலை வைத்துப் படுக்கவும் அஞ்சுகின்றனர்.

ஆனால் நாட்டின் பொருளாதாரம் மேம்பட, புதிய நிறுவனங்கள் தோன்றுவதும் அவற்றில் மக்கள் முதலீடு செய்வதும் அவசியமாகும். மக்களின் சேமிப்பு மூலதனமாக மாறும் போதுதான் தொழில்களும் வேலை வாய்ப்புக்களும் பெருகுகின்றன.

சமீபத்தில் ஒரு நல்ல திருப்பம் ஏற்பட்டுள்ளது. பல அயல் நாட்டு நிதி நிறுவனங்கள் இந்திய பங்கு மார்க்கெட்டில் பங்குகள் வாங்க முன் வந்துள்ளன. இவ்வாறு இது வரை ரூ. 300 கோடி முதலீடு ஆகியிருப்பதாகக் கருதப்படுகிறது. இதனால் பங்கு மார்க்கெட் கொஞ்சம் தெம்புடன் நிமிர்ந்து சுறுசுறுப்புக் காட்ட ஆரம்பித்திருக்கிறது. ரிலையன்ஸ், டெல்கோ, டிஸ்கோ, ஏவிஸி, கோல்கேட், சுந்தரம் ஃபைனான்ஸ், புருக் பாண்ட் போன்ற பல நிறுவனங்களின் பங்குகள் விலை உயர்வு கண்டிருக்கின்றன. எனவே பொதுமக்களும் மறுபடி துணிவு பெற்று பங்குகளில் முதலீடு செய்யத் தொடங்கலாம். வெகு விரைவில் மிக ஆரோக்கியமான நிறுவனங்கள் சில, முதலீட்டு கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வருகின்றன. இவற்றில் முதலீடு செய்வது நிச்சயம் லாபகரமாக இருக்கும் என்று கருதப் படுகிறது. இந்த வாரம் இவற்றில் ஒன்று மட்டும் பார்ப்போம்:

ரிலையன்ஸ் என்ற பெயரை அறியாதார் இல்லை. ஷேர் மார்க்கெட்டில் முதலீடு செய்வதை ஒரு வாடிக்கையாகப் பலர் மேற்கொள்ளக் காரணமே 80 களில் ரிலையன்ஸ் எடுத்துக் கொண்ட முயற்சிகள்தான் என்று சொல்லலாம். செயற்கை இழைகளை உற்பத்தி செய்ய ஆரம்பித்த இந்த நிறுவனம், பிறகு பெட்ரோலியம் உப பொருள்கள் தயாரிப்பிலும் இறங்கியது. ஒவ்வொரு ஆண்டும் நல்ல டிவிடெண்ட் வழங்கி வருகிறது. இந்த நிறுவனத்தில் பணம் புரள்வதற்கு இணையாக வேறு எந்த இந்திய நிறுவனமும் கிடையாது! தலைவர் அம்பானி இப்போது கச்சா எண்ணெய் சுத்திகரிப்புத் துறையிலும் இறங்கத் தீர்மானித்து "ரிலையன்ஸ் பெட்ரோலியம் லிமிடெட்" என்ற புதிய நிறுவனத்தைத் தோற்றுவித்துள்ளார். ஆண்டொன்றுக்கு ஒன்பது மில்லியன் டன் எண்ணெய் சுத்திகரிக்க லைசென்ஸ் பெற்றுள்ள ஜாம்நகரில் உருவாகும் ஆலைக்கு 5142 கோடி தேவை! பிரமிக்க வைக்கும் இத்தொகை கடனாகவும் முதலீடாகவும் பல்வேறு முறைகளில் திரட்டப்படுகிறது. இந்தியப் பொது மக்களுக்கு ரூ. 861 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இது, பகுதி அளவில் பங்குகளாக மாறக் கூடிய டிபென்சர் கடன் பத்திரங்களாக வழங்கப்படும். ஒவ்வொரு டிபென்சர் கடன் பத்திரமும் ரூ. 60 பெறுமானமுள்ளது. இதில் ரூ. 10 உடனடியாக ஒரு பங்காகவும் மற்றும் ஒரு ரூ. 10 கிட்டத்தட்ட ஒன்றரை ஆண்டுகள் சென்று ஒரு பங்காகவும் மாறும். மீதம் ரூ. 40 வட்டியுடன் சேர்த்து 6 வது, 7 வது, 8 வது ஆண்டுகளில் ரூ. 80 ஆகத் திருப்பித்தரப்படும். தவிர ஒவ்வொரு டிபென்சருக்கும் ஒன்று வீதம் வாரண்டுகளும் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு வாரண்டும் 3 வது - 4 வது ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் ரூ. 10 பெறுமானமுள்ள ஒரு பங்காக மாறும். ஆனால் இந்தப் பங்கை ரூ. 20 கொடுத்துப் பெற வேண்டும். வாரண்டையும் மார்க்கெட்டில் விலை பேச முடியும். ஒவ்வொரு டிபென்சருக்கும் மனுச் செய்யும்போது ரூ. 7.50 தந்தால் போதும். பாக்கியை நான்கு தவணைகளில் மூன்று ஆண்டுகளில் தரலாம். மிகக் கவர்ச்சிகரமான வெளியீடுதான்!

– வி. கோபாலன்

**"என்ன ஓய்... பேச்சக் காணோம்? மொதல்ல கடனை நேர் செய்யறதுக்கான வகையப் பாரும். புரிஞ்சுதா? நாளைக்கு அவனைக் கூட்டியாந்துரும்!"**




**சி**ன்னச் சாமிக்கு தவிப்பாக இருந்தது. அவருக்குக் கொஞ்சம் அவசரமான பணத் தேவை. அவசியமான செலவு. ஒரே மகள், இன்று பெரியவளாகி விட்டாள். அவளுக்குச் சடங்கு வைக்க வேண்டும். அதற்கு முன் பணம் கேட்டால், 'முதலாளி என்ன சொல்லப் போகிறாரோ?' என்று அலைபாய்ந்து கொண்டிருந்தார்.

கம்பெனியில் இதுவரை, பத்தாயிரம் ரூபாய்க்கும் மேல் முன்பணமாக வாங்கியிருக்கிறார் அவர். சம்பளப்படி பார்த்தால், அது ஒன்னரை வருடத்துக்கும் மேலான சம்பளம். இவ்வளவு கொடுத்ததே அதிகம். இதற்கு மேலும் முன்பணம் கேட்டால்...

'கடவுளே... முதலாளி நல்ல மூடில் இருக்க வேண்டும்!' என்று வேண்டிக் கொண்ட சின்னசாமி, கதவைத் தள்ளிக் கொண்டு அறைக்குள் நுழைந்தார்.

**வெ**ளியே தகிக்கும் வெயிலின் உக்கிரத்துக்கு, மாறான குளுமை. மெலிதான நறுமணம். முதலாளி, பெர்சனல் கம்ப்யூட்டரில் ஏதோ நம்பர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பார்வை கம்ப்யூட்டர் திரையில் இருந்தாலும், சப்தமில்லாமல் வந்து நின்ற சின்னச்சாமியிடம், ''என்னமய்யா விசேஷம்... மூச்சு விடாம வந்து நிக்கிறீரு?'' என்று கேட்டார்.

''எம்பொண்ணு பெருசாயிட்டா முதலாளி!''

''அதுக்கு என்னை என்ன பண்ணச் சொல்லுறீரு?'' முதலாளியின் எதிர்க் கேள்வியில், குத்தலும், நக்கலும் கைகோத்து 'சட்'டென்று வந்தது.

சின்னச்சாமி இந்த எகடியத்தை எதிர்பார்த்திருக்கவில்லை. முன்பணம் எப்படிக் கேட்க வேண்டுமென்று அவர் ஏற்கெனவே மனதுக்குள் பலமுறை நடத்தி வைத்திருந்த ஒத்திகையின் தவிப்புடன், இதுவும் சேர்ந்து கொள்ள தொண்டை அடைத்தது.

''இல்ல முதலாளி... விசேஷம் வெச்சுருக்கேன். அதுக்குக் கொஞ்சம் முன் பணம் வேணும் முதலாளி!''

''முன் பணமா?'' தேளை மிதித்தவர் போல நிமிர்ந்தார் முதலாளி. ''இப்படியெல்லாம் முன்பணம் தரக்கூடாதுன்னு, சட்டமே இருக்கிறது உமக்குத் தெரியாதாய்யா? அதிக பட்சம் இரண்டரை மாசச் சம்பளம் தான் முன் பணமாத் தரலாம். நீர் அதுக்கும் மேல வாங்கிருப்பீரு போலிருக்கே?'' என்று சட்டம் பேசினார்.

''ஆமாம் முதலாளி!''

''இப்பம் எவ்ள வேணும்?''

''ஆயிரம் முதலாளி!''

''சரி. சொல்லிட்டு வாங்கிட்டுப் போரும். கணக்கும் ஏறிட்டேப் போகுது. அதையும் மனசுல வெச்சுக்குரும்!'' என்றார் முதலாளி.

**ப**ட்டாசுகளுக்கான சீசன் ஆரம்பமாகி விட்டது. புதிய ஆட்கள் நிறைய பேர் வேலைக்குச் சேர்ந்திருந்தனர். பட்டாசுகள் 'மளமள' வென்று உற்பத்தியாகின.

சின்னச்சாமிக்கு, இன்று லேபிள்களை பிரஸ்ஸிலிருந்து கொண்டு வந்து போட வேண்டிய வேலை. முதலாளியின் தம்பி வைத்திருக்கும் பிரஸ்ஸிலிருந்து, அவர் வேன் நிறைய லேபிள்களைக் கொண்டு வந்திருந்தார்.

செமிஃபினிஷிங் கோடவுனில், பாதி நிலையில் தயாரான வெடிகளை அடுக்கி வைத்து விட்டுத் திரும்பிய ஒருவன், ''சின்னசாமி யோவ்... உம்ம, மொதலாளி கூப்புடுதாரு!'' என்று சொல்லி விட்டுப் போனான்.

'இப்படிதான், ஏதாவது வேலைன்னா... கூப்புடு சின்னச்சாமியம்பாரு முதலாளி'. முணுமுணுத்துக் கொண்ட அவர், ''டேய்... கவனமாப் பாத்து எறக்கு!'' விசுவாசமாய்ச் சொல்லி விட்டு, வழிந்த வியர்வையைத் துண்டால் துடைத்த படி, முதலாளியின் அறையை நோக்கிப் போனார்.

கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும், ''என்ன ஓய் நீர்? இதுவரைக்கும் பன்னெண்டாயிரம் ரூவா அட்வான்ஸ் வாங்கிருக்கீரு. கணக்க இப்பதான் பார்த்தேன். எப்படித் திருப்பப் போறீரு?'' என்று கேட்டார் முதலாளி.

சின்னச்சாமி திடுக்கிட்டுப் போனார். முதலாளி ஏதாவது வேலை சொல்வார் என்று ஓடி வந்தார். ஆனால் இங்கு அவர் எதுவும் பேசவில்லை.

''மாசா மாசம், கொஞ்சம் கொஞ்சமா திருப்பிடுதேன் முதலாளி!''

''என்ன ஓய் கொஞ்சம் கொஞ்சம்? இதுக்கு நீர் வாழ்க்கை பூரா உழைச்சாலும் தீராதேமய்யா!''

''நான் என்ன செய்ய முதலாளி? சம்பளம் கைக்கும் வாய்க்கும் சரியாயிடுது. இதுல சடங்கு அப்டி இப்டினு நல்ல நாள், பொல்ல நாள் வந்துருது!'' பவ்யமாய் தாழ்ந்த குரலில், மென்மையாகச் சொன்னார் சின்னச்சாமி.

''நல்லா பேசுதீரு! ஆமா. உம்ம பொண்ணு பெருசானதே அது படிக்கப் போவுதுல்ல? அதக் கொண்டாந்து இங்கே விடுமய்யா. பட்டாக சுத்தும். மாசம் முன்னூறு போட்டுத் தாரேன். ஓமக்கும் ஒத்தாசையா இருக்கும். சுமை குறையு முல்ல? பட்ட கடன் தீருமய்யா!''

சின்னச்சாமி உள்ளூரத் தடுமாறினார்.

''சாமி.. அதப் படிக்க வெக்க.. கொஞ்சம் நல்ல எடமாப்...'' அவர் வாய் வார்த்தைகளை, முதலாளி முழுமை பெற விடவில்லை.

''கொண்டாந்து விடுமய்யா! படிச்சு, அது என்ன பண்ணப் போவுது?'' வார்த்தைகளில் காரம் - அதிகாரம் இருந்தது.

செல்வியின் கனவு வேறு. அவளுக்குப் படிக்க விருப்பம். அதுதான் சின்னச்சாமிக்கும். ''அய்யா... நான் படிச்சு டீச்சர் வேலைக்குப் போவேன்!'' என்று அடிக்கடி சொல்வாள். கொண்டை போட்டு, குடைபிடித்து மகள் போவது போல, அவரும் கனவு



காண்பார். அதனால் சம்பாதித்த கரிக் காசில், அவள் மீது கரித்துகள் படாமல் வளர்த்து விட்டார்.

''என்ன ஓய்... பேச்சக் காணோம்? மொதல்ல கடனை நேர் செய்றதுக்கான வகையப் பாரும். புரிஞ்சுதா? நாளைக்கு அவளக் கூட்டியாந்துரும்!''

முதலாளியின் வார்த்தைகளை மீற முடியாது. மீறினால் பிழைப்பு போய் விடும். உடனே, 'வாங்குன பணத்தை எண்ணி வை' என்பார். சின்னச்சாமி புழுங்கிப் போனார்.

செல்வியைப் பார்த்ததும், ''புள்ள ரொம்ப சூட்டிகை போலருக்கே. பாத்தாலே தெரியுதே. ரொம்ப சீக்கரமா தொழில் கத்துக்கும்யா. சங்குண்ணிட்ட கொண்டு போய் விடும்'' என்றார் முதலாளி.

சங்குண்ணி, டீக்கடைக்குப் போய் விட்டு, திரும்பிக் கொண்டிருந்தான். அவனிடம் செல்வியைக் காட்டி, ''எம் பொண்ணுப்பா. உம் பொண்ணு மாதிரி!'' என்று வார்த்தைகளில் அழுத்தம் வைத்துச் சொன்னார்.

''ஆங்... அதெல்லாம் நல்லாப் பாத்துக்குவேன்!'' என்றான் சங்குண்ணி, இளக்காரமான குரலில். தொனியில் பிசிறு தட்டியது. அப்படியே அவளை அழைத்துப் போய், பசை ஒட்டி லேபிள் சுத்தும் சுலுவான வேலையை, முதலில் கொடுத்தான்.

அவன், 'அப்டி... இப்டி...' என்று வேண்டுமென்றே தொட்டுத் தொட்டு சொல்லிக் கொடுத்ததாக, செல்வி இரவில் சொன்னாள்.

சின்னச்சாமிக்கு இதுபோல நடக்குமென்று தெரியும். வேறு வழியில்லை. கழுத்தில் ஏர் கட்டியாகி விட்டது. உழுதே ஆக வேண்டும். அவர் நொந்து போய் மகளிடம் பதிலேதும் சொல்லவில்லை.

ஆனாலும் மனசு வலித்தது. 'முதலாளியிடம், தனக்கு ஒரு பெண் இருக்கும் விஷயத்தை, அது பெருசான விஷயத்தை சொல்லாமலேயே இருந்திருக்கலாமோ? பணம் கேட்கப் போய்த் தானே அவருக்கு பெண் இருக்கும் விஷயமே தெரிந்தது' என்று ஒரு புறம் நினைத்தாலும், விதி வலியது என்று அடங்கிப் போனார்.

மறுவாரம், செல்வி சங்கு சக்கரம் செய்யும் அளவுக்குத் தேறியிருந்தாள்.

இன்று செல்வியுடன் வேலை செய்யும் மீனா வரவில்லை. செல்வி மட்டும், அந்த பத்துக்கு ஆறு செவ்வக அறையில் வேலை செய்து கொண்டிருந்தாள்.

சங்குண்ணி சுற்றி வந்தான். ''என்ன செல்வி, உன் சோடி இன்னிக்கி லீவா?'' என்றவன், அவள் செய்து குவித்து வைத்திருந்த சங்கு சக்கரங்களைக் கண்டதும், ''அட... அதுக்குள்ள இன்னிக்கி இம்புட்டு சக்கரம் செஞ்சுட்டாப் போல. எங்கே ஒண்ணு எடு. பாப்பம்!'' என்று அறைக்குள் நுழைந்தான்.

தனித்தனி அறைகள். அறைக்கு இரண்டு பேர். எல்லோரும் அவரவர் வேலையாய் இருந்தனர்.

செல்வி எழுந்து, அம்பாரமாய் குவித்து வைத்திருந்த சங்கு சக்கரங்களில் ஒன்றை எடுத்...

அவளைப் பின்புறமாக இடித்துக் கொண்டு நின்றான் சங்குண்ணி. சொர சொரப்பான அவன் கைகள், செல்வியின் பின்புறம் மீது பட்டன. உராய்வில் மிரண்டு போன அவள் பட்டென்று அவன் கைகளைத் தட்டி விட்டாள்.

இளிப்பு அவளை எரிச்சலில் ஆழ்த்தியது. ஆள் காட்டிவிரல் நீட்டி, ''இதெல்லாம் வேற எவக்கிட்டயாச்சும் வெச்சுக்கோ. எங்கப்பாருட்டச் சொல்லிப்புடுவேன்!'' என்று மிரட்டினாள். இமைகளை மீறி விழிகள் வெளியில் வந்தன. ஆனாலும், அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. கண்களில் நீர் திரண்டது. அழ ஆரம்பித்தாள்.

உடனே சங்குண்ணி, ''இப்போ என்ன பண்ணிட்டேன்னு அழுறே? தெரியாம மேல கைப் பட்டுருச்சு. சரி. சரி. வேலையப் பாரு!'' என்றபடி இறங்கிப் போய் விட்டான்.

அவனது வார்த்தைகள், செல்விக்குத் திருப்திகரமாக இல்லை. ஆத்திரம் ஊட்டுவனவாக இருந்தன. வெடித்துக் கிளம்பிய ஆத்திரத்தில், மருந்து கொட்டி வைத்திருந்த இரும்புத் தகரத்தைக் காலால் உதைத்தாள்.

அது தரையில் சிதறிக் கிடந்த ஒயிட் பவுடர், பெரியக் கலவையில் உரசி, தீப் பொறியைக் கிளப்பியது. அவ்வளவுதான்.

### ஒருநாள் போட்டி தோன்றியது எப்படி?

**1971 - ல் மழைகாரணமாக, இங்கிலாந்துக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையிலான டெஸ்ட் மாட்ச் நின்று போனபோது! மாட்ச்சின் கடைசி நாளன்று பார்வையாளர்களைத் திருப்தி செய்வதற்காக, 40 ஓவர்கள் கொண்ட மாட்ச் ஆடப்பட்டது. அதில் காணப்பட்ட பரபரப்பு, தொடர்ந்து ஒருநாள் போட்டிகளுக்கு வழி வகுத்தது.**

**- கௌதம்ராம்.**



மருந்தினூடே எழுந்த தீப்பொறி 'டமால்' எனும் சப்தத்துடன் வெடித்தது. அதைத் தொடர்ந்து, செல்வி வேலை செய்த செவ்வக அறைக்குள் வெண்புகை மண்டலம்!

சப்தம் கேட்டு எல்லோரும் ஓடி வந்தனர். வெண்புகை அடங்க எட்டிப் பார்த்த போது, செல்வி கருகிக் கிடந்தாள்.

ஒரு வாரம் போனது. சின்னச்சாமி முகத்தில் களை திரும்பவில்லை. ஆனால் வேலைக்குத் திரும்பி விட்டார். உயிர் குடிக்கும் தொழிலென்றாலும், உயிர் பிழைக்க வேண்டுமே!

பம்பாய் ஆர்டர் ஒன்று. கோடி ரூபாய் பெறும். இன்று பட்டாசுக் கட்டுகளை எண்ணுமிடத்தில் வேலை அவருக்கு. மேய்த்துக் கொண்டிருந்தார்.

அவர் தோளில் ஒரு கை!

திரும்பினார்.

முதலாளி!

அவரைப் பார்க்க எரிச்சலாக வந்தது. வெளிக்காட்டிக் கொள்ள முடியாத இயலாமை. ''என்ன முதலாளி?'' அவர் குரலில் துக்கத்தின் கரகரப்பு.

''கொஞ்சம் ஆபீஸ் வரைக்கி வந்துட்டுப் போருமய்யா!''

போனார்.

''உம்மப் பொண்ணை நெனக்கிறப்ப எனக்கும் கஷ்டமாருக்குதய்யா!''

''.........''

''இதுல ஒரு கையெழுத்துப் போடுமய்யா. உம்மப் பொண்ணு செத்தது போலீஸ் வரைக்கும் போயிட்டதய்யா. அவுக கேஸ் எழுதிப்புட்டாக. இப்ப எனக்கு பிரச்னை வந்துருச்சு. லேபர் கோர்ட், அது, இதுனு அலைய வேணும் போலிருக்கு. எனக்கிருக்க சோலில அதுவா முக்கியம்? அதுனால, 'எம்பொண்ணு அன்னைக்கு மதுரைக்குப் போக லீவு எடுத்துருந்துச்சு. மதுரைக்குப் பொறப்புட்டுப் போறப்ப, என்னப் பாத்து சொல்லிப்புட்டு போக வந்தப்பதான் இந்த விபத்து. விபத்து நடந்தப்போ அது டூட்டில இல்ல'னு எழுதிருக்கேன்!'' என்றார் முதலாளி.

நல்ல ஜோடனை. பணம் இருந்தால் பொய்களை ஜோடிக்கும் வழிகளும் எளிதில் தெரிந்து விடுகிறது. உண்மையை மறைக்க எத்தனை இலகுவாக வார்த்தைகள் வந்து விழுகின்றன?

சின்னச்சாமி எதையும் படிக்கவில்லை. நீட்டிய இடங்களில் கையெழுத்துப் போட்டார். மனசு வலித்தது. 'பொருள் இல்லாதவனுக்கு வேகம் கூடாது. விவேகம் கூடாது. வீரம் கூடாது. சூடு, சொரணை, ரோசம் எதுவும் கூட!' மனதில் நினைத்தபடி, அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியேற முயன்றார்.

''கொஞ்சம் நில்லுமய்யா!'' என்ற முதலாளி, மேஜையின் டிராயரைத் திறந்து எதையோ எடுத்தார்.

சின்னச்சாமி, கதவருகே கைகளைக் கட்டிக் கொண்டு நின்றிருந்தார்.

''எல்லாத்தையும் சரி கட்டிட்டேன். மொக்க எடுத்துட்டாலுக. உம்ம பொண்ணு செத்ததால, எனக்கு அப்டி இப்டினு பத்தாயிரம் வரைக்கும் செலவு. நீர் ஒரு ஆளுதான் பாக்கி!'' ஐந்து நூறு ரூபாய் தாள்களை உருவ, அவரிடம் நீட்டி, ''இந்தாரும்!'' என்றார் முதலாளி.

இறந்து போன மகள் உயிருக்கு ஈட்டு! வேலை செய்யும் போதுதான் இறந்தாள் என்று, அவர் வெளியில் சொல்லாமலிருக்கக் கையூட்டு!

'த்... தூ...' என்று காறி உமிழ வேண்டும் போலிருந்தது. அவற்றை அலட்சியமாகப் பார்த்து விட்டு வெளியில் வந்தார். முதல் முறையாக முதலாளியின் சொல்லுக்குக் கட்டுப்படாமல் எதிர்ப்பு காட்டி விட்ட திருப்தி, சின்னச்சாமியின் நெஞ்சில் அரும்பி, முகத்தில் புன்னகை பூத்தது.

நிமிட நேரம் அந்தத் திருப்தியை அனுபவித்தவரின் மனத்தில், இறந்து போன செல்வியின் நினைவு, 'குபுக்'கெனப் பீறிட்டது. கண்களில் நீர் திரண்டது. வேப்ப மர நிழலில் நின்று குமுறிக் குமுறி அழுதவர், ''எஞ்சாமி... மனுஷனைப் படைச்சுட்டு, அவனுக்கு ஒரு சாண் வயித்தையும் வெச்சே?'' என்று வானத்தைப் பார்த்துப் புலம்பினார்.

கண்களில் திரண்டிருந்த கண்ணீரைத் துண்டால் துடைத்தபடி, பட்டாசுக் கட்டுகளை எண்ணும் இடத்தை நோக்கித் தளர்வாக நடந்தார்.



# "ரெட்லைன்" எனப்படும்

தில்லி போக்குவரத்துக் கழகத்தின் அழுது வழியும் வெளிர் பச்சை நிற பஸ்கள் மட்டுமே ஓடிக் கொண்டிருந்த தில்லி வீதிகளை, கடந்த ஓராண்டு காலமாக வண்ண வண்ண பஸ்கள் அலங்கரிக்கின்றன. வெள்ளை நிற சொகுசு வண்டிகள் (இதில் குறைந்தபட்ச கட்டணமே நான்கு ரூபாய் தான்), பச்சை நிற துரித வண்டிகள், சிவப்பு மற்றும் நீலநிற தனியார் பஸ்கள், மஞ்சள் நிற பள்ளிக்கூட பேருந்துகள் என்று வண்ண வண்ண பஸ்கள் தெருவில் மக்களை அலற அடிக்கின்றன.

இந்த வண்ண வண்ண பஸ்களில், 'ரெட் லைன்' எனப்படும் தனியார் துறையைச் சார்ந்த சிவப்பு நிற பஸ்கள், தற்சமயம் தில்லியை ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருக்கின்றன. தினமும் பொழுது விடிந்து எழுந்தால், தினசரிகளில் இந்த சிவப்பு வண்டிகளின் மண்டை, பஸ்ஸின் சக்கரங்களை விட அதிவேகமாக உருளுகின்றன. தில்லிவாசிகள், நரசிம்மராவுக்கும் ஹர்ஷத் மேத்தாவுக்கும் அடுத்தபடியாக அலசும் விஷயம் இந்த ரெட்லைன் பஸ்கள்தான். ''கொலைகார பஸ்'' ''ராட்சஸ வாகனம்'' என்றெல்லாம் செல்லப் பெயர் சூட்டப்பட்டுள்ள இந்த பஸ்களுக்கு அபாயக்குறியான சிவப்புச் சாயம் அடித்திருப்பது சாலப் (சாலைப்) பொருத்தம்!

மாநில போக்குவரத்து அதாரிட்டி, சென்ற ஆண்டு அக்டோபர் மாதம் 3,000 சிவப்பு பஸ்களுக்கு லைசென்ஸ் வழங்கியது. தற்சமயம் சுமார் 2,300 ரெட்லைன் பஸ்கள் தெருக்களில் மக்களை ஓட ஓட விரட்டிக் கொண்டிருக்கின்றன. இந்த சிவப்பு பஸ்கள் ஓட ஆரம்பித்த பிறகு, பலர் ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள்களில் அலுவலகத்திற்குச் செல்வதை நிறுத்தி விட்டார்கள். சுலபமாக பஸ் கிடைக்கிறது என்பது ஒரு காரணம். ஆனால் அதைவிட முக்கிய காரணம், தெருவில் நடமாடுவது அல்லது ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள்களில் போவதை விட, சிவப்பு பஸ்ஸிற்குள் உட்கார்ந்து போவதில் ஆபத்து குறைவு என்பதே.

ஓட ஆரம்பித்த, பத்து மாத காலத்திற்குள் எழுபத்தி ஒன்பது பேர்களைப் பலி

# "டெட்லைன்" பஸ்கள்!

வாங்கி, சுமார் முந்நூறு விபத்துக்களை உருவாக்கி, இந்தத் தனியார் வண்டிகள் பெரும் சாதனை படைத்துள்ளன. இதுவரை, சுமார் இருபத்தி ஏழாயிரம் வழக்குகள் இந்த சிவப்பு வண்டிகளுக்கு எதிராகப் பதிவாகி உள்ளன. ஒரு ரெட்லைன் பஸ், "I am risky without whisky" என்று, பெருமையாக பஸ்ஸில் பலகை மாட்டிக் கொண்டிருப்பதைக் கண்டு, தில்லிவாசிகளுக்கு அழுவதா, சிரிப்பதா என்று புரியவில்லை. இவை, ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு வலதுபுறத்திலிருந்தும், இடதுபுறத்திலிருந்தும் ஓவர்டேக் செய்வதைக் காணும் பொழுது தெருவில் மக்களுக்கு மயிர்க் கூச்சல் எடுக்கும். சாலைகளா அல்லது பந்தய மைதானமா என்று சந்தேகம் எழும்!

அதற்காக, சிவப்பு பஸ்களில் ஏறினால் சட்டுப்புட்டென்று நாம் போக வேண்டிய இடத்தை அடைந்து விடலாம் என்று கற்பனையை ஓட விட வேண்டாம். ஒவ்வொரு பஸ் நிறுத்தத்திலும், குறைந்தபட்சம் இரண்டு நிமிடங்களாவது பஸ்ஸை நிறுத்தி, "கிரிஷி பவன், பார்லிமெண்ட், கனாட் பிளேஸ், கரோல்பாக், தேவ் நகர்..." என்று பஸ் ரூட்டின் இடங்களையெல்லாம் (சமயத்தில் போகாத ஊருக்கும் வழி சொல்வதுண்டு) மூச்சு விடாமல் அறிவித்து, பயணிகளை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்காத குறையாக வரவேற்பார்கள். இதற்கென்றே ஒவ்வொரு சிவப்பு பஸ்ஸிலும், இரண்டு மூன்று பொடிப் பையன்களை வேலைக்கு வைத்திருக்கிறார்கள். சமயத்தில் போட்டி முற்றிப் போய், அரசாங்க அல்லது வேறு தனியார் பஸ்களில் ஏறப் போகும் பயணிகளைக் கையைப் பிடித்து இழுத்து ஏற்றிக் கொள்வதும் உண்டு.

பொடியன்களின் காட்டுக் கத்தல், வியாபாரிகள் தங்கள் பொருட்களை கூவி விற்பனை செய்யும் சத்தம், இவை போதாதென்று, பஸ்ஸிற்குள்ளிருந்து சினிமாப் பாடல்கள் வேறு அலறும். இப்படிப்பட்ட அமர்க்களத்துக்கிடையில் நாம் அரைமணியில் போய்ச் சேர வேண்டிய இடத்திற்கு, முக்கால் அல்லது ஒரு மணி நேரத்திற்குள் தலைவலி இல்லாமல் போய்ச் சேர்ந்தால் அதிருஷ்டசாலிகள்தான்!

திடீரென்று, மாநில போக்குவரத்து அதாரிட்டி மூவாயிரம் தனியார் பஸ்களுக்கு லைசன்ஸ்கள் வழங்கவும், பயிற்சி பெற்ற டிரைவர்களுக்கு ஏகத் தட்டுப்பாடு உண்டாகியது. பூர்வ ஜென்மத்தில் டிராக்டர் அல்லது ரோட்ரோலர் ஓட்டிப் பழகியிருந்தால் கூடப் போதும், இந்த ரெட்லைன் பஸ்களில் டிரைவராக வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் என்று கேள்வி. விபத்துக்கள் பெருகக் கேட்பானேன்?

சிவப்பு நிறத் தனியார் பஸ்களுக்கு வசூல் ஒன்றுதான் குறி. நாள் ஒன்றுக்கு வசூல் இரண்டாயிரம் ரூபாய்க்குக் குறைவாக இருக்கக் கூடாது என்பது பஸ் முதலாளிகள், டிரைவர், கண்டக்டர்களுக்கு விடுத்திருக்கும் கட்டளை. இந்தக் கட்டளையைச் சிரமேற்கொண்டு, டிரைவர்கள் வழியில் எத்தனை சிரங்களை வீழ்த்துவார்களோ அல்லது எத்தனை சிக்னல்களைத் தாண்டுவார்களோ, அதைப் பற்றியெல்லாம் பஸ் முதலாளிகளுக்குக் கவலையில்லை. போலீஸ் கேஸ், சலான் என்று வீண் வம்பில் டிரைவர்கள் மாட்டிக் கொண்டால், அவர்களைத் தப்பிக்க வைக்கும் வழிகளை இந்த பஸ் முதலாளிகள் நன்றாகவே தெரிந்து வைத்துள்ளார்கள். அது மட்டுமல்ல, ரெட்லைன் பஸ்களின் உரிமையாளர்களில் பலர், தில்லியின் பெரிய புள்ளிகள். பலர் பினாமி பெயர்களில் இந்தத் தனியார் பஸ்களை நடத்துவதாகப் பேச்சு.

தில்லி நகரை அமளிதுமளிப்படுத்தும் ரெட்லைன் பஸ்களுக்கு எதிராக தினசரிகள், மற்றும் பொது மக்கள் எழுப்பும் கூச்சல்களைப் பொறுக்க முடியாமல், தில்லி போக்குவரத்துப் போலீஸ், சமீபகாலமாக, இந்த பஸ்களை ஓர் ஒழுங்குக்குக் கொண்டு வருவதற்கான முயற்சிகளில் இறங்கியுள்ளது. ஆயினும் நிலைமையில் அதிக அபிவிருத்தி ஒன்றும் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ரெட்லைன் என்று தவறிப் போய் அழைக்கப்படும் இந்த 'டெட்லைன்' பஸ்கள், தில்லியின் ஜனத்தொகையைக் கணிசமாகக் குறைத்து விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

– ரமாமணி சுந்தர்

படம் : செந்தில் ஆர். கணேஷ்

# அமரர் கல்கி

எழுதிய

# தியாக பூமி

## 3. சீட்டுக் கச்சேரி

தஞ்சாவூர் ஜில்லாவில் குடமுருட்டிப் பாசனத்தில் உள்ளது நெடுங்கரை கிராமம்.

வருஷம் 1918; மாதம் சித்திரை; தேதி ஞாபகமில்லை. அன்று வெயில் கொளுத்தும் உச்சி வேளையில், நெடுங்கரை அக்கிரகாரம் வழக்கம் போல் அமைதி குடிகொண்டு விளங்கிற்று.

“ஐயோ!” என்று அலறிப் புடைத்துக் கொண்டு சாவித்திரி எழுந்தாள். பூஜையறையிலிருந்து வெளியே ஓடினாள். அதே சமயம், வாசற்கதவு திறந்தது…

அக்கிரகாரத்தில் பெரிய தெரு என்றும், சின்னத் தெரு என்றும் இரண்டு தெருக்கள் உண்டு. பெரிய தெருவில் சுமார் இருபது வீடுகள் இருக்கும். தெருவின் நடுமத்தியிலுள்ள ஒரு வீட்டின் வாசல் திண்ணையில் வெயிலுக்கு அடக்கமாகத் தட்டி கட்டியிருந்தது. அந்தத் தட்டி மறைவில் சிலர் உட்கார்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

ஒருவர் இஸ்பேட் ஆஸ் சீட்டை எடுத்துத் தரையில் ஓங்கி அடித்து விட்டு, ‘‘ஏண்டா, வெங்கிட்டு! சம்பு சாஸ்திரி ஏண்டா இன்னும் வர்றலை? இந்த வருஷ



### சென்ற வாரம்….

வெகுதான் அலைந்து, தன் மகளுக்கு ஒரு நல்ல வரன் பார்த்துவிட்ட சந்தோஷத்துடன் சம்பு சாஸ்திரிகள் தமது நெடுங்கரை கிராமத்துக்குத் திரும்புகிறார்.

ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டருடன் தாம் பார்த்து வந்த வரன் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார். வம்பு பிடித்த தீட்சிதர், ‘வேலையில்லாத ஒருவனுக்கா உங்கள் பெண்ணைத் திருமணம் செய்து வைக்கப் போகிறீர்கள்?’ என்று சம்பு சாஸ்திரிகளைச் சீண்டுகிறார். அதனைக் கண்டுகொள்ளாமல் சம்பு சாஸ்திரிகள், தமது வண்டிக்காரன் கொண்டு வந்திருந்த மாட்டு வண்டியில் புறப்படுகிறார். வண்டி வேகத்தில் அவர் கையிலிருந்த ஜாதகக் கட்டிலிருந்து இரண்டு தாள்கள் பறந்து போய் விழுகின்றன. சம்பு சாஸ்திரிகள், வண்டியை நிறுத்தி, இறங்கிப் போய் அதனைப் பொறுக்கி எடுத்து வருகிறார். அதுவரை உற்சாகமாகக் கல்யாணம் பற்றிப் பேசிக் கொண்டு வண்டி ஓட்டி வந்த நல்லான் இச்சம்பவத்தால், உற்சாகம் குறைந்தவனாக, மௌனமாக வண்டியைச் செலுத்துகிறான். இனி…

மும் கல்யாணம் நடக்காது போலிருக்கே?'' என்றார்.

''இன்னிக்கு வர்றார் என்று கேள்வி, சாமா! ரயிலடிக்குக் கூட வண்டி போயி ருக்கே!'' என்று வெங்கிட்டு என்கிற வெங் கட்ராமய்யர் சொல்லி விட்டு, கீழே கிடந்த சீட்டுக்களையெல்லாம் எடுத்துக் கலைக்க ஆரம்பித்தார்.

''இந்த வருஷங்கூடக் கல்யாணம் பண்ணாமற்போனா, அப்புறம் பெண்ணை



ஆத்திலேயே வைச்சுக்க வேண்டியதுதான்; ஏற்கெனவே அது குதிரையாட்டமா வளர்ந்திருக்கு!'' என்றார் சாமாவய்யர்.

வெங்கட்ராமய்யர் சீட்டைக்கலைத்துப் படார் படார் என்று அடித்து விட்டு, நாலு நாலு சீட்டாகப் போட்டார். பிறகு, ''ரமணி! கேளேண்டா!'' என்றார்.

ரமணி ஐயர், ''பிரயோஜனமில்லை. மேலே'' என்றார்.

அடுத்தவர், ''கேள்வி'' என்றார்.

''மேலே பத்து'' என்றார் அதற்கு அடுத்தவர்.

''இன்னொரு பத்து'' என்றார் வெங்கட்ராமய்யர்.

''துருப்பு!'' என்று கேட்டார் நாலாவது ஆசாமி. கொஞ்ச நேரம் ஆட்டத்தின் சுவாரஸ்யத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

''நரசிங்கபுரம் வரனைத்தான் கடைசியிலே நிச்சயம் பண்ணிண்டு வருவார் போலிருக்கு'' என்றார் வெங்கட்ராமய்யர்.

''ரமணி! மெதுவாய் அந்தச் சம்பந்தியின் விலாசத்தை மட்டும் நீ கொஞ்சம் தெரிஞ்சுண்டு வர்றேளண்டா!'' என்றார் சாமா அய்யர்.

''உனக்கு என்னத்துக்கடா அப்பா அந்த விலாசம்?''

''என்னத்துக்கா? ஒரு மொட்டைக் கடுதாசி எழுதிப் போடலாம்னுதான்.''

''அந்தப் பாச்சாவெல்லாம் கல்கத்தாக்காரன்கிட்டப் பலிக்காது. மலை முழுங்கி மகாதேவனுக்குக் கதவு ஓர் அப்பளாம். அவன்கள் எல்லாம் சாதி ஆசாரத்தை விட்டு எத்தனை நாளாச்சோ!... இறங்கித் தொலையேண்டா, பஞ்சு! கிளாவர் ராணியைக் கையில் வச்சுண்டு ஏன் முழிச்சிண்டிருக்கே?''

''அதுக்காக இல்லேடா! ஒரு கடுதாசி எழுதிப் போட்டு வச்சா, இன்னும் ஆயிரம் இரண்டாயிரம் பணமாவது கறக்கட்டுமேன்னுதான்! நான் சொல்றேன், கேளு, ரமணி! இந்தக் கல்யாண சமயத்திலே ஏதாவது ஒர கலகம் பண்ணினால் ஒழிய, சம்பு சாஸ்திரிக்குப் புத்தி வராது. வரவர மனுஷன் பண்ணற அக்கிரமம் அதிகமாகப் போச்சு. குடியானத் தெருவிலே யாராவது இப்போ நாம் சொல்றபடி கேக்கறானா? எல்லாரும் இரண்டு படி கூலி கொடுத்தா, அவன் இரண்டரைப் படி கொடுக்கிறது. எல்லாரும் அஞ்சிலே ஒரு வாரம் கொடுத்தா இவன் நாலிலே ஒன்று கொடுக்கிறது. இப்படிப் பண்ணிப் பண்ணி ஊரைக் குட்டிச்சுவராய் அடிச்சிட்டான்...''

''அதெல்லாம் சரிதானப்பா. அவன் செய்றது ரொம்ப அக்கிரமந்தான். ஆனால், நீ என்ன வேணாலும் பண்ணிக்கோ! கல்யாணத்தை மாத்திரம் நிறுத்திவிடாதே! அஞ்சாறு நாளைக்கு ஆத்திலே அடுப்பு மூட்டாமல் சௌக்கியமாய்ச் சாப்பிடுகிறதைக் கெடுத்து விடாதே!''

''ரமணி! பஞ்சு ஏன் இப்படிச் சொல்றான் தெரியுமோல்லியோ? அவன் ஆம்படையாள் மூணு மாதமாய் நலங்குப் பாட்டெல்லாம் நெட்டுருப் பண்ணிண்டிருக்கா. அதையெல்லாம் பாடித் தீர்த்துடணுமாம்.''

''கல்யாணம் நின்று போனால், பஞ்சுவுக்குக் கஷ்டம்; அடுத்தபடி ராமய்யா வாத்தியாருக்கு வருத்தம். ராமய்யா வாத்தியார் அவர் அம்மா வருஷாப்திகத்துக்கு இந்தக் கல்யாணத்தைத்தான் நம்பியிருக்கார்; தெரியுமோ இல்லையோ?''

''என்னை ஏண்டா இழுக்கறயள் உங்க வம்பிலே? நான் சிவசிவான்னு இருக்கேன்'' என்றார் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ராமய்யா வாத்தியார்.

அப்போது ரமணிஐயர், ''சாமா! நீ இந்த விஷயத்திலே கொஞ்சங்கூடச் சிரத்தை எடுத்துக்க வேண்டாம். நம்ப தீக்ஷிதன் இருக்கான். எல்லாம் பாத்துக்குவன். அவனுக்கு ஏற்கெனவே சம்பு சாஸ்திரி மேலே கோபம், அவன் 'லெட்டில்' பண்ணிண்டு வந்த கிழவனுக்குப் பொண்ணைக் கொடுக்கலேன்னு'' என்றார்.

''தீக்ஷிதன் கூட இன்னிக்கு எங்கேயோ கிளம்பிப் போயிருக்கான். ஏதாவது வத்தி வைக்கத்தான் போயிருக்கானோ, என்னமோ?'' என்றார் ராமய்யா வாத்தியார்.

''என்னவெல்லாமோ சொல்லப் போயிட்டீர்களே தவிர, அந்தப் பொண் சாவித்திரி படற கஷ்டத்தைக் கவனிக்க மாட்டேங்கறயளே! எப்படியாவது அவளுக்கு ஒரு வழி பிறந்தாப் போதும் என்று எனக்கு இருக்கு. பாரு! மங்களம் அவளை என்ன பாடு படுத்தி வைக்கறா,



## அருள்வாக்கு

“வேதோ (அ)கிலோ தர்ம மூலம்” – ஸகல தர்மங்களுக்கும் மூலம் வேதந்தான் – என்றே மநு சொல்லியிருக்கிறார். எல்லாக் காலத்துக்கும் பொதுவான சாச்வத தர்மங்களைச் சொல்வது வேதம்தான் என்று அவர் சொல்லி விட்டார்.

வேதம் எப்படிச் சொல்கிறதோ அப்படித்தான் செய்ய வேண்டும். அது சொல்வதை மீறக் கூடாது. ஏனென்றால், அது தான் தர்மமூலம். யாராவது ஒன்றைச் சொல்லி அதை நாம் துளிக்கூட ஆட்சேபிக்காமல் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்றால், “அது என்ன வேத வாக்கோ?” என்று கேட்கிற வழக்கம் இன்றும் நம்மிடம் இருக்கிறது. அதாவது, ‘வேத வாக்கு’ என்றால் எதிர்க் கேள்வி கேட்காமல் அதன்படி செய்து தான் ஆக வேண்டும் என்று அத்தனை பொது ஜனங்களும் நம்பி வந்ததைத்தான் “வேத வாக்கோ?” என்று கேட்கிற வழக்கு நிரூபிக்கிறது.



இப்படி எத்தனையோ ஆயிரம் வருஷங்களாக அது தான் நமக்குப் பெரிய சட்டமாக இருந்திருக்கிறது. அதனாலேயே, வைரம் பாய்ந்த மரம் என்கிறோமே, அந்த மாதிரி, வேதம் வைரம் பாய்ந்ததாக இருக்கிறது. அநாதியாக வந்து கொண்டிருக்கும்படியான சட்டப் புஸ்தகம் அது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

பாரு!” என்றார் வெங்கட்ராமய்யர்.

அப்போது, அந்த வீட்டுக்கு எதிர்ச்சாரியில், இரண்டு வீட்டுக்கு அடுத்த வீட்டிலிருந்து, ஒரு ஸ்திரீயின் குரல், “அடியே சாவித்திரி! உன்னைக் கட்டையிலே வைக்க! இங்கே உடனே வர்றயா இல்லையா?” என்று கூச்சலிடும் சப்தம் கேட்டது.

சாமா அய்யர், “சாவித்திரி மாத்திரம் ஏதோ பரமசாது என்று எண்ணாதேடா, வெங்கிட்டு! அது பொல்லாத வாய்த் துடுக்கு!” என்றார்.

“போகிறது; மங்களத்துக்குப் பரிந்து பேச நீ ஒருவனாவது இருக்கியே?” என்றர் ரமணி ஐயர்.

“போடா! இது என்ன ஆட்டண்டா! சீட்டை நேரப் பிடிக்கிறதா தலைகீழாப் பிடிக்கிறதா என்று தெரியாதவனோடெல்லாம் ஆட வேண்டியிருக்கு!” என்று சொல்லி, சாமாவய்யர் கையில் இருந்த சீட்டுகளைக் கீழே விட்டெறிந்தார். எல்லாரும் அவரவர் சீட்டுகளைத் தரையில் தொப்பு தொப்பென்று போட்டார்கள்.

“பட்டாபிஷேகத்துக்குப் பயந்துண்டு போட்டுட்டயாக்கும். சரி, சரி. ஆட்டம் போரும்; அவாவாள் ஆத்துக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வாருங்கோ!” என்று வெங்கட்ராமய்யர் சொல்லிச் சீட்டுகளை எடுத்துச் சேர்த்தார். கச்சேரி முடிந்தது; ஒவ்வொருவராய் எழுந்து சென்றார்கள்.

### 4. சாவித்திரியின் அலறல்

**சா**வித்திரிக்குச் சாபங்கொடுத்த குரல் எந்த வீட்டிலிருந்து வந்ததோ, அந்த வீடு நெடுங்கரை அக்கிரகாரத்திலேயே பெரிய வீடாய்க் காணப்பட்டது. அதுதான் சம்பு சாஸ்திரியின் வீடு என்பதை நாம் சுலபமாய் ஊகிக்கலாம்.

அந்த வீட்டின் முன் வாசற்படிக்கு மேலே ‘ஸ்ரீராம ஜயம்’ என்றும் ‘நல்வரவு’ என்றும் எழுதியிருப்பதைப் பார்த்ததும், நமக்கும் உள்ளே போகலாம் என்ற தைரியம் ஏற்படுகிறது. வீட்டுக்குள்ளிருந்து வரும் புஷ்பங்களின் நறுமணமும் நம்மைக் கவர்ந்து இழுக்கிறது.

உள்ளே சென்றதும், விஸ்தாரமான கூடத்தைப் பார்க்கிறோம். கூடத்தின் சுவரில் படங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன. ஒரு படத்தில், ஸ்ரீராமன் மகுடாபிஷேகம் செய்து கொள்கிறான். இன்னொரு படத்தில் குழந்தை கிருஷ்ணன் கட்டை விரலை ருசி பார்த்துக் கொண்டிருக்கிறான். மற்றொரு படத்தில் வேணுகோபாலன் பசு மாட்டின் மீது சாய்ந்து கொண்டு புல்லாங்குழல் வாசிக்கிறான். வேறொரு படத்தில் சீதை மாயமானைப் பிடித்துத் தரும்படி இராமனைக் கேட்டுக் கொண்டிருக்கிறாள். இன்னொரு படத்தில் ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி மயில் வாகனத்தில் வீற்றிருக்கிறார்.

இவற்றை நாம் பார்த்துக் கொண்டிருக்கையில், இனிமை ததும்பும் பெண் குரலில், செஞ்சுருட்டி ராகத்தில்,

‘எப்போ வருவாரோ எந்தன் - கலிதீர’

என்ற நந்தன் சரித்திரக் கீர்த்தனை கேட்கிறது. பாட்டு வந்த பக்கம் திரும்பிப் பார்த்தால், கூடத்தின் ஒரு பக்கத்திலுள்ள பூஜை அறையில் ஓர் இளம்பெண் உட்கார்ந்து பூத் தொடுத்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அந்த அறையின் சுவரோரத்தில் அமைந்த பூஜை மண்டபத்தில் பித்தளைப் பீடம் ஒன்றில் தேவியின் விக்கிரகம் இருக்கிறது. பின்னால் சில படங்களும் இருக்கின்றன. மண்டபத்துக்கு எதிரில் அழகாக இழைக் கோலம் போட்டிருக்கிறது. குத்து விளக்கு எரிகிறது.

பாடிக் கொண்டிருந்த பெண்ணுக்கெதிரில் இரண்டு தாம்பாளங்கள் இருக்கின்றன. ஒன்றில் உதிரிப் பூக்களும் இன்னொன்றில் தொடுத்த பூமாலைகளும் இருக்கின்றன. அப்போது அந்தக் குழந்தை - ஆம், குழந்தையென்றுதான் சொல்ல வேண்டும்; வயது பதின்மூன்று பதினாலுக்குள்தான் இருக்கும். ஊசியும் நூலும் வைத்துக் கொண்டு சம்பங்கிப் பூக்களை நீளவாக்கில் கோத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பால்வடியும் முகத்தில் புன்னகை பூத்திருந்தது.

பின்கட்டிலிருந்து, முன்னமேயே நாம் கேட்ட ஸ்திரீயின் குரல், ''அடியே சாவித்திரி! நீ நாசமாய்ப் போக! இப்போ உடனே எழுந்து வர்றயா, இல்லையா?'' என்று உரத்துக் கத்தியது கேட்டது.

''நான் நாசமாய்ப் போய்ட்டா அப்புறம் நீ சௌக்யமாயிருப்பாயா, சித்தி?' என்றாள் சாவித்திரி. இப்படி அவள் மெதுவான குரலில்தான் சொன்னாள். ஆனாலும் அது பின்கட்டுக்கு எட்டியிருக்க வேண்டும். ஏனெனில், அடுத்தகணம், உள்ளே இன்னொரு வயதான ஸ்திரீயின் குரல், ''வாயைப் பார்த்தியோல்யோ, வாயை!'' என்று சொல்வது கேட்டது.

ஒரு நிமிஷத்துக்கெல்லாம், ''என்ன சொன்னே?'' என்று கேட்டுக் கொண்டு ருத்ராகாரமாக ஒரு ஸ்திரீ சமையலுள்ளிருந்து வந்தாள். அவளுக்கு வயது சுமார் 25 இருக்கும். அவளுக்குப் பின்னால் முதுமைப்பிராயத்து ஸ்திரீ ஒருத்தியும் வந்தாள்.

சாவித்திரி சாந்தமாக, ''சித்தி! நான் ஒன்றும் சொல்லி விடவில்லையே! இப்ப, ஊரிலிருந்து அப்பா வந்துடுவாளே; வந்ததும் பூஜைக்கு எல்லாம் தயாராயிருக்க வேண்டாமா? அதுக்கோசரம் இந்தப் பூவை ஒரு நிமிஷத்திலே தொடுத்து வைச்சுட்டு வரலாம்னு இருந்தேன். அதுக்குள்ளே நீ கோவிச்சுண்டு நூறு கட்டேலே போறதுக்கும், ஆயிரம் நாசமாகப் போறதுக்கும் இழுத்துட்டயே?'' என்றாள்.

''ஆமாண்டி, ஆமாம்! உனக்கு நாலு வயதிலேருந்து வேளா வேளைக்குச் சாதம் போட்டு, தலை பின்னி, எண்ணெய் தேச்சுவிட்டு, எல்லா எழவும் எடுக்கிறதுக்கு எனக்குப் பாத்தியதை உண்டு; ஒரு வார்த்தை சொல்றதுக்கு மட்டும் பாத்தியதை இல்லை! ஆமானே?'' என்றாள் மங்களம்.

''இப்ப என்னடி ஆச்சு, பெண்ணே! இன்னும் கல்யாணம், கார்த்தி, தீவாளி, சங்கராந்தி, இரட்டி, சீமந்தம் எவ்வளவோ பாக்கி இருக்கே! அவ்வளவு எழவும் நீதானே எடுத்தாகணும்?'' என்றாள் மங்களத்தின் தாயார்.

''பாட்டி! எனக்குக் கல்யாணமும் வேண்டாம். கழுத்தறுப்பும் வேண்டாம். சித்திக்கு ஏற்கெனவே வையத் தெரியாது! நீங்க வேறே கத்துக் கொடுங்கோ!'' என்றாள்.

இதைக் கேட்ட பாட்டி, ''பார்த்தாயா? பார்த்தாயா? நான் கத்துக் கொடுக்கிறேனாமே! முளைச்சு மூணையாகலே? அதுக்குள்ளே இவ்வளவு அகமா? இந்த வீட்டிலே நான் என்னத்துக்கடி இருக்கேன் இனிமேல்? இதோ போறேன்! நீயாச்சு, உன் பொண்ணாச்சு'' என்றாள்.

அதற்கு மங்களம், ''நன்னாயிருக்கே? நீ என்னத்துக்குப் போறது? நாளைக்கு வீட்டை விட்டு ஓடப் போற நாய்க்காக நீ ஏன் போகணும்? பேசாமே இரு. நானும் போனால் போறது, போனால் போறது என்று விட்டு விட்டுத்தான் இப்படிக் கட்டை துளுத்துப் போச்சு. இதோ கரண்டியைக் காய்ச்சிண்டு வந்து இவ முதுகிலே சூடு போடாத போனால், என் பேர் மங்களமில்லை'' என்று சொல்லி விட்டு, அவசரமாகச் சமையற்கட்டுக்குள் போனாள். அவளைத் தொடர்ந்து பாட்டியும் சென்றாள்.

அவர்கள் போன பிறகு, சாவித்திரி சற்று நேரம் மேலே பார்த்தவண்ணம் மௌனமாயிருந்தாள். பிறகு, குனிந்து பூவைக் கோக்க ஆரம்பித்தாள். அவள் கண்ணில் துளித்திருந்த ஜலம், முத்து முத்தாகப் பூக்களின் மீது உதிர்ந்தது. கண்ணீரை நிறுத்துவதற்காகவோ என்னவோ அவள் கண்ணை இறுக மூடிக் கொண்டு சற்று நேரம் இருந்தாள். கூடத்தில் காலடிச் சப்தத்தைக் கேட்டுக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

மங்களம் சமையலறையிலிருந்து கையில் இருப்புக் கரண்டியுடன் வருவது தெரிந்தது. அந்த இருப்புக் கரண்டியின் அடிப்பாகம் பழுக்கக் காய்ந்து அதிலிருந்து புகை வந்து கொண்டிருந்தது.

''ஐயோ!'' என்று அலறிப் புடைத்துக் கொண்டு சாவித்திரி எழுந்தாள். பூஜை அறையிலிருந்து வெளியே முற்றத்தைப் பார்க்க ஓடினாள். மங்களமும் அவளைத் தொடர்ந்து போனாள். முற்றத்திலிருந்து தாழ்வாரத்தில் பாய்ந்து ஏறினாள் சாவித்திரி. மங்களம் அப்படியும் விடவில்லை. அவள் ரொம்ப நெருங்கி வந்து விடவே, சாவித்திரி ரேழிக் கதவைத் திறந்து கொண்டு ரேழியில் ஓடினாள்.

அதே சமயத்தில், வாசற்பக்கத்திலிருந்து வாசற்கதவும் திறந்தது.

சம்பு சாஸ்திரி உள்ளே வந்தார்!

(தொடரும்)



ஹரியானாவில் உள்ள மத்திய சிறைச்சாலைக்குள் கைதிகள் யாரேனும் ஒரு பாம்பைக் கொன்றால் அவருக்குச் சிறைத் தண்டனையிலிருந்து இரண்டு நாட்கள் தண்டனைக் குறைப்பு செய்யப்படும்.

நன்றி : பிசினஸ் இந்தியா

தகவல் : ஸ்ரீகாந்தன்

# HINDU SAYS

A visit to the cave temple of Lord Nrisimha located at the top of a 2800 - foot hill is considered a must for those who follow the Ahobila Math 'sampradaya' and have Sri Azhagiyasingar as their preceptor; but not many are able to accomplish that. It is as if to satisfy a long-felt need that 'Gnanabhoomi' Manian has brought out 'Ahobilam', a video magazine in the Dharshan series of Manian Creations. With his experience in producing recently three video cassettes in connection with the centenary celebrations of Kanchi Paramacharya. Manian has produced 'Ahobilam' in a commendable way. The 60 - minute documentary, shot just three weeks ago when the 45th jeer of Ahobila Math commenced his 'chaturmasya vritham' there, covers not only the main temple believed to belong to the 11th century, but also the various shrines located in the lower and upper Ahobilams where Lord Nrisimha is depicted in different moods and poses, besides capturing the splendour of the area. It has a few shots of the consecration of the Rajagopuram at Srirangam projecting the tremendous task accomplished by the previous Azhagiyasingar. There is also a brief but interesting animation of the story of Prahlada and 'Nrisimha avathar'. — C.R.

---

# 175 ரூபாய்க்கு முடிவெட்டிக் கொள்ளலாம்!

முடியலங்காரம் செய்யும் ருக்ஷர் வாடியா ஏன் தமது முடியை



அலங்கரித்துக் கொள்ளவில்லை? இன்று இளைய தலைமுறையினரிடையே இதுதான் 'டாப் ஃபாஷன்'!

வட்ட முகமா? முன் நெற்றி முடிக்குச் சற்று உயரம் கொடுத்து, வாரி அலங்காரம். கன்னங்களில் அவ்வளவாகச் சதையில்லாத முகத்தோற்றமா? காதோரக் கூந்தல் சுருள்களுக்கு அடுக்கடுக்காக வடிவம். முன் முடி சற்றே பின்னோக்கிப் போகத் துவங்கி, நெற்றி அகலமாகத் தெரிகிறதா? குழல் கற்றைகள் அதை மறைப்பது போல முன்வந்து விழும் அலங்காரம் - இப்படி ஒரு முக அமைப்பைக் கண்டதுமே ருக்ஷர் வாடியாவின் மனத்தில் கற்பனை வடிவங்கள் எழ, கையில் விளையாடும் கத்தரி அவற்றுக்கு நிஜவடிவம் கொடுத்து விடுகிறது! முப்பது நிமிடங்களில் முகத் தோற்றமே மாறிப் போகிறது.

பள்ளிப் படிப்பு முடிந்தவுடனேயே கூந்தல் அலங்காரக் கலையைக் கற்றுக் கொள்ள லண்டனுக்குப் பறந்து சென்றவர் ருக்ஷர்.

விடால் சசூன், மாரிஸ், மாஸ்டர் கிளாஸ் இன்டர்நேஷனல், டோனி அன்ட் கை, லோரியல், நிக்கி க்ளா - இவையெல்லாம் பிரபலமான கூந்தல் அலங்காரக் கலையைக் கற்றுக் கொடுக்கும் கல்லூரிகள். ஒவ்வொரு இடத்தின் செய்முறைக்கும் தனி முத்திரை உண்டு. ஒருவரது 'ஹேர்-கட்'டைப் பார்த்தாலே அது யார் பாணி என்று கண்டுபிடித்து விடலாம்.

''இரண்டு வருடங்கள் லண்டனிலேயே தங்கி, இந்த எல்லா இடத்து வகுப்புகளுக்கும் சென்று இந்தக் கலையைக் கற்றுக் கொண்டேன். பூனாவுக்குத் திரும்பி யதும் என் வீட்டிலேயே கூந்தல் அலங்காரத் தொழில் செய்ய ஆரம்பித்தேன்.'' - இப்படிக் கூறும் ருக்ஷர் சென்ற ஒரு வருடமாக, வாரத்தில் இரு நாட்கள் பம்பாய்க்கும் சென்று லக்மே பியூட்டி பார்லரில் பெண்களுடன் ஆண்களுக்கும் சிகை அலங்காரம் செய்து வருகிறார்.

''வயது வரம்பு கிடையாது. பிறந்த குழந்தைகளுக்கும் முடிவெட்டியிருக்கிறேன். பூனாவில் 90 வயது மூதாட்டி ஒருவர் என்னைத் தவிர வேறொருவரிடமும் முடி திருத்திக் கொள்ள மாட்டார்...'' என்று சிரிக்கிறார் ருக்ஷர்.

''வெளிநாடுகளில் பருவ நிலைக்கு ஏற்ப, ஆடைகளின் ஃபாஷன் மாறுவது போல, ஹேர்ஸ்டைலும் மாறும். ஆனால் இந்தியாவில் அப்படியில்லை. முற்றிலும் மாறுதலான அலங்கா ரங்களைச் செய்து கொள்ள சற்றுத் தயங்குவார்கள். இந்த நிலைமை யும் கொஞ்சம் கொஞ்சமாக மாறி வருகிறது. கல்லூரி மாணவிகள், இல்லத்தரசிகள் - இப்படி எல்லோரும் தங்கள் தோற்றத்தில் கவனம் செலுத்த ஆரம்பித்திருக்கிறார்கள். முடி அலங்காரம் தோற்றத்தோடு மட்டுமல்ல, அணியும் உடை, வாழும் சூழல், பழகும் இடங்கள் - இவை எல்லாவற்றுடனும் ஒத்துப் போக வேண்டும்'' என்கிறார் ருக்ஷர்.

இப்படிப் பார்த்துப் பார்த்துச் செய்யப்படும் ஹேர்கட் ஒன்றுக்கு, ஷாம்பூ, ப்ளோட்ரையுடன் சேர்ந்து ஆகும் சார்ஜ் : 175 ரூபாய்! சென்னை யில் அறிமுக வாடிக்கையாளர்கள் என்பதால் இம்முறை ரூ 25 கம்மி செய்தார். ஆனால் செலவைப் பற்றி யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. ருக்ஷர் சென்னை யில் இருந்த ஒரு வார காலம் தினமும் காலை பத்து மணி முதல் மாலை ஆறு வரை 'அப்பாயின்ட் மென்ட்' அனைத்தும் பதிவாகி, வெயிட்டிங் லிஸ்டிலும் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன!

– நிர்மலா சக்ரவர்த்தி

படம் : கோபிநாத்

# 'சேவா' நடக்கிறது; உலகம் வியக்கிறது!

நோபெல் பரிசு, இந்திரா காந்தி விருது என்றெல்லாம் சொல்வது போல, ''மக்ஸைஸாய் பரிசு'' பிலிப்பைன்ஸ் நாட்டில், அந்நாட்டின் முன்னாள் ஜனாதிபதி ஒருவர் நினைவாக வழங்கப்படுகிறது. சமுதாயப் பணி, இலக்கியம், விஞ்ஞானம் என்று பல பிரிவுகளில் வழங்கப்படும் இப்பரிசு இந்தியாவிலும் சிலருக்குக் கிடைத்திருக்கிறது. அவர்களில் ஒருவர் ஈலா.



✱ மங்குபென் : ''இனி சாப்பாட்டுக் கஷ்டமில்லை...''



✱ வண்ணமயமான விரிப்பு – சேவா உறுப்பினரின் கைவண்ணம்

துணி ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளர் நலனுக்காகப் பாடுபட்டு வந்தார் ஈலா. மக்ஸைஸாய் விருதுடன் சேர்ந்து கணிசமான தொகை கிடைத்ததோ இல்லையோ, நம் நாட்டுக்கே உரித்தான போட்டி, பொறாமை எல்லாம் கிளர்ந்தெழ, ஈலா, தாம் அதுவரை பணியாற்றி வந்த அமைப்பிலிருந்து விலகிப் புதுமையான அமைப்பை ஆரம்பித்தார். என்ன புதுமை?

தொழிலகங்களில், காரியாலயங்களிலெல்லாம் மாதச் சம்பளம் வாங்குகிறவர்களுக்குச் சங்கங்கள் உள்ளன. ஆனால் சுயதொழில் செய்து சம்பாதிப்பவர்களின் நலனை யார் கவனிப்பது? அதுவும் பெண்கள்! தையல் வேலை, செருப்புத் தைக்கும் வேலை என்று எத்தனைவிதமான தொழில்களில் பெண்கள் ஈடுபட்டுள்ளனர்! அவர்களுக்காகப் பாடுபடத் தீர்மானித்த ஈலா, Self Employed Women's Association என்ற பெயரில் ஓர் அமைப்பைத் தோற்றுவித்தார். முதல் எழுத்துக்களைக் கூட்டினால் ''சேவா'' என்ற பெயர் பொருத்தமாக அமைந்தது!

அஹமதாபாத்தில் துணிகளில் டிசைன் அச்சிடும் குடிசைத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஆயிரக்கணக்கான முஸ்லிம் குடும்பங்கள் உள்ளன. இப்பணியில் ஈடுபட்டுள்ளோர் பெரும்பாலும் பெண்கள். அவர்களில் ரெஹானா என்ற 22 வயது இளம் பெண், சம்பிரதாய சமுதாயக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து விட்டு இன்று வெளியுலகை

✱ கைத்தொழில்களுக்கு ஆதரவு : பெண்கள் வாழ்வில் மலர்ச்சி...



**சேவா அமைப்பின் செயலர், பொருளாளர் போன்ற பதவிகளையெல்லாம் பீடி சுற்றும், காகிதம் பொறுக்கும், செருப்புத் தைக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்களே திறம்பட வகிக்கின்றனர்.**

எட்டிப் பார்க்கிறார்; தமது கற்பனையில் பிறந்த புதிய புதிய டிசைன்களை வண்ணத்தில் துணியில் அச்சிட்டுப் பிரபலப்படுத்துகிறார் என்றால் காரணம் 'சேவா'தான்.

குஜராத்தில் எங்கோ ஒரு குக்கிராமத்தில் மங்குபென் கார்சன்பாய் என்ற பெண்மணி செருப்பு தைத்து வந்தார். அவர் இப்போது பூத்தையல் வேலையில் தமது திறமையைக் காட்ட, டில்லி, பெங்களூர், சென்னை என்று ஓய்வின்றிப் பயணப்பட்டு பலருக்குப் பயிற்சி அளிக்கிறார் என்றால் காரணம் சேவா.

இப்படிப் பல்லாயிரக்கணக்கான உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். 1972-ல் குஜராத்தில் தோன்றி, இன்று 50,000 அங்கத்தினர்களோடு டில்லி, லக்னோ, ஜபல்பூர், பிஹெலா என்று ஆலமரமாகக் கிளை பரப்பியிருக்கிறது சேவா.

தலைவி ஈலா, அநீதியை எதிர்த்துப் போராடும் போது துணிவும் உடன் பணியாற்றுபவர்களின் பிரச்னைகளை உணர்ந்து தீர்ப்பதில் கனிவும் உடையவர் என்று போற்றப்படுகிறார்.

ரெடிமேட் உடைகள் தைத்துக் கொடுத்து அன்றாடக் கூலியாக மூன்று ரூபாய் பெற்ற பெண்கள், பீடி சுற்றும் தொழிலில் எட்டு ரூபாய் கூலிக்கு உழைத்த பெண்கள், என்று பலர் சார்பாகவும் போராடி, அவர்களுக்கு நியாயமான கூலி வாங்கித் தந்தவர் ஈலா.

பனாசர்கட்டா ஆதிவாசிகளின் கலைத் திறனில் உருவான முத்து ஆபரணங்கள், கைத்திறனில் செய்யப்படும் பிரம்பு வளையல்கள், இவற்றுக்கு ஏற்றுமதி வாய்ப்புக்களைப் பெற்றுத் தந்து, அம் மக்களின் பொருளாதாரம் உயர வழிவகுத்தவர் ஈலா.



● ஈலா (படம் : [illegible])

முடிவின்றி விரியும் சேவாவின் பணிகளை, அண்மையில் ஜப்பானில் நடந்த ஒரு கருத்தரங்கு ஆராயப் போக, உலக வங்கியின் உதவித் தொகை மிகச் சிறப்பான விதத்தில் பயன்படுத்தப்பட்டிருப்பது தெரிய வந்தது. அசந்து போன வங்கி இயக்குனர் ஒருவர், அந்தத் திட்டங்களையெல்லாம் அப்படியே அள்ளிக் கொண்டு நைரோபிக்குப் பறந்திருக்கிறார் - அங்கே இதே திட்டத்தைப் பின்பற்றி பணியாற்றச் சொல்லலாம் என்ற நோக்கில்!

கூட்டடக் கலை நிபுணரான மகன், பொருளாதாரப் பேராசிரியரான கணவர், ஆகியோரும் ஈலாவின் பணிகளுக்கு ஆலோசனையும் உதவியும் புரிகின்றனர்.

சேவா, குடும்பப் பிரச்னைகளையும் அணுகுகிறது. தமது அங்கத்தினர்கள் யாருக்காவது கணவனுடன் கருத்து வேறுபாடு என்றால் டைவோர்ஸுக்குத் தூண்டுவது இல்லை; சமரசத்துக்கே முதலிடம் தந்து சேர்த்து வைக்கப் பாடுபடுகிறது.

சேவாவின் கவனம் சமீபத்தில் தென் னகத்துப் பக்கமும் திரும்பியுள்ளது. திருவனந்தபுரத்தில் சங்கு அணிகலன்கள் செய்வோருக்கு விற்பனை வசதிகளை உருவாக்கித் தந்திருக்கிறது.

“உங்கள் அமைப்பின் முக்கியமான கோட்பாடு என்ன?” என்று கேட்டால் ஈலா சொல்கிறார் :

“முதலில் அங்கத்தினர்களுக்குத் தங்கள் தொழிலின் மகிமை உணர்த்தப்படுகிறது. வயிற்றுப் பாட்டுக்காக மட்டும் செய்வதான எண்ணத்தை மாற்றி, சமுதாய மேம்பாட்டுக்கு நாமும் உதவுகிறோம் என்று பெருமிதம் கொள்ளக் கற்றுத் தரப்படுகிறது. இரண்டாவது, சட்டத்தில் இப் பெண்களை ஏய்த்துப் பிழைப்பவர்களை எதிர்த்துப் போராட தைரியம் ஊட்டப்படுகிறது. மூன்றாவதாக, கூட்டுறவு முறையில் இணைந்து செயலாற்றினால் உற்பத்தி, விற்பனை இரண்டிலும் சாதனை படைக்கலாம் என்பதோடு, தங்களை ஏமாற்ற எண்ணுபவர்களை எதிர்த்து வெற்றி காண்பதும் எளிது என்பது எடுத்துக் காட்டப்படுகிறது.”

மாபெரும் சேவா அமைப்பின் செயலர், பொருளாளர் போன்ற பதவிகளையெல்லாம் பீடி சுற்றும், காகிதம் பொறுக்கும், செருப்புத் தைக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்களே நிரம்பட வகிக்கின்றனர் என்பது, அதன் தலைவர் ஈலாவின் லட்சியங்கள் நிறைவேறி வருவதற்கு மற்றுமொரு எடுத்துக்காட்டு.

– நிர்மலா சக்ரவர்த்தி

வண்ணப்படங்கள் : கோபிநாத்

# மறுபடியும் மாமி!



**"சே...! இந்த மாமி கூட இதே ரோதனையாப் போச்சு..."**

அழைப்பு மணி அழைத்தது. 'யாரது? கொஞ்ச நேரம் நிம்மதியா இருக்க விட மாட்டாங்க!' என மனத்துக்குள் பொருமிக் கொண்டே கதவைத் திறந்தாள் காயத்ரி. பக்கத்து வீட்டு மாமி நின்று கொண்டிருந்தாள்.

''குழந்தே, தப்பா நினைக்கக்காதே! ஊரிலிருந்து என் பையனும் மாட்டுப் பொண்ணும் வந்திருக்கா. கல்யாண கேசட்டைப் போட்டுப் பார்க்கணும்னு எம் மருமகள் சொல்றாடி குழந்தே. அதான், கொஞ்சம் வி.சி.ஆர். கொடுத்தேன்னா...''

'போச்சு! ஒசிக்கு எது, எதுதான் கேட்கணும்னு விவஸ்தையே இல்லாம போச்சு!' என மனத்துக்குள் கறுவிக் கொண்டாள் காயத்ரி.

''என்ன குழந்தே யோசனை?''

''ஒண்ணுமில்லே மாமி... உங்களுக்கு இல்லாததா! கொஞ்சம் இருங்க.'' எடுத்து வந்து கொடுத்தாள்.

சே...! இந்த மாமி கூட இதே ரோதனையாப் போச்சு. எல்லாத்தையுமே இரவல் கேக்கறா... நாமளும்தான் இத்தனை வருஷமா இருக்கோம். எதையாவது அவளிடம் கேட்டிருப்போமா! என்ன ஜென்மமோ!

மறுநாள் மாலை அழைப்பு மணிச் சப்தம் வர, கதவைத் திறந்தாள். அதே மாமி. ''குழந்தே அடிக்கடி தொந்தரவு செய்யறேன்னு நெனைக்காதே! என் மகனும், மருமகளும் சினிமாவுக்குப் போறாளாம்... துவைக்கப் போட்ட துணி கொஞ்சம் சுருக்கமா இருக்கு. கொஞ்சம் இருடா, பக்கத்து ஆத்து குழந்தைகிட்டே அயர்ன்பாக்ஸ் வாங்கிண்டு வரேன், அயர்ன் பண்ணி போட்டுண்டு போகலாம்னு சொன்னேன்...'' என்றபடி விறுவிறுவென்று சமையல்கட்டு வரை வந்து விட்டாள்.

போச்சுடா!

''கொஞ்சம் இருங்க மாமி, எடுத்து வரேன்!''

''மகராசியா இருக்கணும்டி குழந்தே'' என்றவள் அயர்ன் பாக்ஸை வாங்கிக் கொண்டு திரும்பினாள். அம்மியின்மேல் கிடந்த கடலையையும், தேங்காய்த் துருவலையும் பார்த்தவள்,

''ஏண்டியம்மா... இப்படி அம்மியிலே போட்டு சட்னி அரைக்கிறியே, மிக்ஸி என்னாச்சு?''

''அது காயில் தீந்துக போய்க் கெடக்கு மாமி. நானும் இந்த ஒரு வாரமா சொல்லிக்கிட்டுதான் இருக்கேன். காதுல போட்டுக்க மாட்டேங்கிறார்!''

மறுநாள் எப்பொழுதும் போல் ஆபீஸ் விட்டு வந்த உடனே அழைப்பு மணிச் சப்தம் கேட்டது.

'அதே கிழமாகத்தான் இருக்கும். ஏதாவது சாக்கு சொல்லி, குழந்தே அதை கொஞ்சந்தாடி, இதைக் கொஞ்சந்தாடின்னு வந்து நிற்கும் சனியன்! இன்னைக்கு மூஞ்சியிலே அடிக்கிற மாதிரி நாலு வார்த்தை நறுக்கென்று சொல்லிவிட வேண்டியதுதான்!'

''இந்தா குழந்தே... மிக்ஸி என்கிட்டே இரண்டு கெடக்குடி குழந்தே! நான் ஒண்டிக்கட்டைதானே! ஒண்ணுதான் யூஸ் பண்றேன். இன்னொண்ணு சும்மாத்தான் கெடக்கு! காலையிலே நீ அம்மியிலே அரைக்கிறேன்னு சொன்னதும் எனக்கு மனசு பொறுக்கலடி குழந்தே! அதான் நானே கொண்டு வந்துட்டேன். உன் மிக்ஸி சரியாகிற வரைக்கும் இதை வச்சுக்கோ! மனுஷாளுக்கு, மனுஷா இது கூட உதவலேன்னா எப்படி?''

– மிஜாஜீன் நிசா

விஷ்வக்சேனனின்

# பாண்டியன் மகள்

சுற்றுமுற்றும் பார்த்தபடியே சமுத்திரபந்தனை நெருங்கியது அந்த உருவம்... தாழ்ந்த குரலில் ஏதோ பேசியது... குடிசை மறைவிலிருந்து இரு கூர்விழிகள் அதை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தன...



## 35. பாண்டியர் ஆலோசனை

சோழர் படைத்தலைவன் காலிங்கராயன் வடக்கே துங்கபத்திரையாற்றின் கரையில் எங்கோ சாளுக்கியப் படைகளுடன் போர் புரிந்து கொண்டிருப்பதாகத் தான் கருதியிருக்க, அவனே தன் எதிரே அதிவேகமாக சோழப்படையின் முகப்பில் பாய்ந்து வந்து கொண்டிருப்பதைக் கண்ட ருத்திரப் பாண்டியன், அதுவரை தானறிந்த செய்திகள் யாவும் வெறும் வதந்திகள்தாம் என்பதையும், சாளுக்கிய விக்கிரமாதித்தனை மட்டுமின்றி கங்க மன்னனையும் சிங்கணனையும் கூட முறியடித்து விட்டு, காலிங்கராயன் தெற்கு நோக்கி அதிவேகமாகத் திரும்பிக் கொண்டிருக்கிறான் என்பதையும் புரிந்து கொண்டான். எதிரில் பாய்ந்து வந்து கொண்டிருந்த படையைக் கண்டவன், அது சோழரின் பெரும் படையின் ஒரு பகுதியே என்பதும் புரிந்ததால் இதைப் போல வேறு பிரிவுகளும் தெற்கே ஆரவாரமின்றித் திரும்பிக் கொண்டிருக்க வேண்டும் எனவும் ஊகித்தான். அப்படி பல பிரிவுகளாக சோழர் படை பிரிந்து செல்வதன் நோக்கமும் அவன் புத்தியில் பளிச்சிட்டதால், மாறவர்மன் மீது பச்சாதாபமே பிறந்தது அவனுக்கு. மாறவர்மன் கோட்டாற்றிலிருந்து மதுரையை நோக்கி வருவதோ, மீண்டும் மதுரையில் அரசை அமைப்பதோ இனி பகற்கனவுதான் என்பதும் தெளிவாகப் புரிந்தது அவனுக்கு. சோழர் படைபலத்தையும், யுத்த தந்திரங்களையும் முழுதும் உணராது மாறவர்மன் செய்த போர் ஏற்பாட்டுக்கு இணங்கிய தனது நிலையும் இன்னும் சில நாழிகைகளில் விரும்பத்தக்கதாக இருக்காது என்பது

நன்றாகப் புரிந்தாலும், முடிந்தவரை தன் திறமையைப் பயன்படுத்தி, சோழர் படையை நாசம் செய்தே மடிவது என்ற தீர்மானத்திற்கு வந்தான் ருத்திரப் பாண்டியன்.

எண்ணத்தின் வேகத்தை விட அதிவேகமாக வந்து கொண்டிருந்த காலிங்கராயன், தன் வாளை உயர்த்திச் சைகை செய்யவே, ஒரே சமயத்தில் புரவி வீரர்களிடமிருந்து விண்ணில் பறந்த வேல்கள் ஜிவ்வென்று காற்றைக் கிழித்தபடி பாண்டியர் படையில் வந்து இறங்கின. பக்கவாட்டில் வந்த யானைகள் யந்திரத் தேர்களை பிடுந்துத் துவைத்தன. தேர்கள் பல குடைசாய்ந்தும், உடைபட்டும் கழன்று கொண்டிருந்த சக்க



ரங்களுடன் சரிந்தன. வானில் தூக்கி எறியப் பட்ட வீரர்களின் அலறல்களும், மளமள வென்று தேர்கள் முறிபடும் ஓசையும், வேல்கள் மார்பில் பாய்ந்ததால் எழுந்த மரணக் கூச்சல்களும் அந்த முல்லையாற்றங்கரைப் பகுதியில் பெரும் ரணகள ஓலத்தைச் சிருஷ்டித்தன.

அணிவகுப்பைப் பக்கவாட்டில் உடைத்த காலிங்கராயன், தன் பெரும் வாளைச் சுழற்றியபடியே ருத்திரப் பாண்டியனை நெருங்கினான். அவனைத் தொடர்ந்த புரவிப் படையும் பாய்ந்த வேகத்தைப் பயன்படுத்தி பாண்டியர் படையை ஊடுருவியது.

காலிங்கராயன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட ருத்திரப் பாண்டியன், தனது ரதத்தின் பின்புறத்திலிருந்த அம்பு வீசும் யந்திரத்தை சோழப் படைத்தலைவனை நோக்கித் திருப்ப முயன்றான். அது முழுவதும் திரும்புமுன்பாக நெருங்கி விட்ட காலிங்கராயன், சரமாரியாக எறிந்த வேல்கள் அந்த யந்திரத்தை இரண்டாகப் பிளந்தது மட்டுமின்றி, அதை இயக்கிய வீரனையும் மாய்த்தது.

யந்திரங்கள் பயனற்றுப் போனதால் வெருண்ட பாண்டியன், தன் வாளை காலிங்கராயனின் வாளுடன் மோத விட்டான். உக்கிரமான போரினால் இயற்கையாகவே சந்துஷ்டியடையும் சுபாவமுள்ள காலிங்கராயனும் ஒரு அகரச் சிரிப்புடன் தன் வாளால் பாண்டியனைத் தாக்கத் தொடங்கினான்.

உத்தமபாளையத்தின் அமைச்சனும் படைத்தலைவனுமான அழும்பில்வேள் அதே நேரத்தில் படைகளைத் திருப்பி, ரதங்களைத் தாக்கிய யானைப் படையைக் கலைக்க முயன்றான். ஆனால் அந்த முயற்சி பலனளிக்கவில்லை. ரதங்களை நிர்மூலம் செய்த அந்தப் போர் யானைகள், அத்துடன் நிற்காமல் ஆற்றில் இறங்கி, வெள்ளத்தைக் கடந்து, மறுகரையில் ஏறத் துவங்கின. அவற்றைத் தொடர்ந்து புரவி வீரர்களும் அக்கரையை அடைந்து, அங்கிருந்த பாண்டிய படையைத் தாக்க ஆரம்பித்தனர். அழும்பில்வேள் ஆற்றை நெருங்கு முன்பு விற்களை வரிசையாக மணலில் பதித்து, அம்பு மழை பொழிந்த சோழ வீரர்கள், நீண்ட மதிற்சுவர் போல அவனைத் தடுத்தனர்.

இருபுறங்களிலும் நெருக்கப்பட்ட தனது படை நிறைவதைக் கண்ட ருத்திரப் பாண்டியன், நிதானத்தை இழந்திருக்க வேண்டும். சுழற்றிக் கொண்டிருந்த தனது வாளை இரு கரங்களாலும் பிடித்து உயரே தூக்கி, காலிங்கராயனின் தலைமீது இறக்க முயன்றான் அவன். ஆனால் அவனது இரு கரங்களும் இணைந்ததுமே அவன் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட காலிங்கராயன், தன் வாளால் அந்த வாளைத் தலைக்கு மேலேயே தடுத்ததன்றி இடது கையால் புரவியின் பக்கவாட்டில் தொங்கிய வேல் ஒன்றை எடுத்து, கண்ணிமைக்கும் நேரத்தில் ருத்திரப் பாண்டியனின் மார்பில் பாய்ச்சினான். போர்க் கவசத்தை உடைத்துக் கொண்டு பாய்ந்த அந்த வேல், ருத்திரப் பாண்டியனின் மார்பைப் பிளந்து, கூரிய முனை முழுதுமாக அவன் உடலில் புகுந்தது.

கையிலிருந்த வாள் நழுவி விழ, அப்படியே ரதத்தின் தட்டில் சாய்ந்தான் ருத்திரப் பாண்டியன். மன்னன், மார்பில் வேலுடன் சரிந்ததை தூரத்திலிருந்து கண்ட அழும்பில் வேள் உதவிக்கு ஓடி வர முயன்றான். அவனைச் சூழ்ந்து கொண்ட சோழ வீரர்கள் அவன் கையிலிருந்த வாளைப் பறித்து அவனைக் கைது செய்தனர்.

ஒன்றரை ஜாம நேரமே நடந்த அந்தப் போரில் உத்தமபாளையத்தின் படையில் பெரும் பகுதி அழிந்திருந்தது. களத்திலிருந்து எந்த வீரனும் தப்ப முயலாததையும், வேல்களுக்கும் வாட்களுக்கும் பாண்டிய வீரர்கள் தமது உயிரைத் தாராளமாக வழங்கியதையும் கண்டு பெரிதும் வியந்தான் காலிங்கராயன். உத்தமபாளையத்தின் கோட்டையும் அரண்மனையும் காலிங்கராயன் வசப்பட அதிக காலம் ஆகவில்லை.

ஐந்து பாண்டியருள் முதலில் வீழ்ந்த ருத்திரப் பாண்டியனை அரச மரியாதைகளுடன் தகனம் செய்த காலிங்கராயன், அழும்பில் வேள் சிறைவைக்கப்பட்டிருந்த கூடாரத்தை நெருங்கினான்.

ஓர் அமைச்சருக்குரிய மரியாதையாக, காலிங்கராயன் உத்தரவுப்படி, கைகள் பிணைக்கப்படாமல் கூடாரத்தினுள் உலவ விடப்பட்டிருந்தான் அழும்பில்வேள். வெளியில் விழிப்புடன் காவலிருந்த வீரர்களின் வணக்கத்தை ஏற்றபடியே உள்ளே நுழைந்த காலிங்கராயன், அழும்பில் வேளின் எதிரிலிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். அவன் கூரிய விழிகள் அழும்பில் வேளின் உள்ளத்தையே ஊடுருவின.

"சாப்பிட வர்றவங்களைத் தடுத்து அவங்க உள்ளங்கையை முதலாளி தடவிப் பார்க்கிறாரே, ஏன்?"

"உள்ளங்கை காய்ப்பு காய்ச்சிருந்தா மாவுக்கிராக்கின்னு அர்த்தம். அப்படியே வெளியில் அனுப்பத்தான்!"

- வேதபுரி எஸ். ரமேஷ்



சாளுக்கியரையும் கங்கபாடி மன்னனையும் வென்று, ஆரவாரமின்றி சர்வ சாதாரணமாக உத்தமபாளையத்தையும் கைக்கொண்ட அந்த மகாவீரனை ஏறெடுத்து நோக்கிய அழும்பில்வேள், அவன் உடையிலும் கைகளிலும் இன்னும் குருதி வழிந்து கொண்டிருப்பதையும், அதை லட்சியம் செய்யாது அவன் அமர்ந்திருப்பதையும் கண்டு வியந்தான்.

அவன் பார்வை படிந்த இடங்களைக் கவனித்த காலிங்கராயன் இதழ்களில் முறுவல் அரும்பியது.

''காயங்களைக் கவனிக்க அவகாசமில்லை அமைச்சரே, உங்களிடம் சில விஷயங்களைப் பேசி முடிவு செய்யவே வந்தேன்'' என்றான் படைத்தலைவன்.

அழும்பில்வேள் முகத்தில் சந்தேகச் சாயை படர்ந்தது.

''போரில் வென்றவர் நீங்கள். என்னைக் கேட்டு எதையும் முடிவு செய்யும் அவசியமே உங்களுக்கில்லையே'' என்றான்.

''இந்த உத்தமபாளையத்தின் அமைச்சராக நீங்கள் நீண்ட காலமாக இருந்திருக்கிறீர்கள்.''

''அதனால்?''

''இதைச் சோழ மன்னருக்கு அடங்கிய சிற்றரசாக உம்மிடமே அளிக்க எண்ணுகிறேன். எமது காவற்படையும் உத்தமபாளையத்தில் உங்களுக்கு உதவும்.''

காலிங்கராயனது வார்த்தைகளில் அடங்கியிருந்த பொருளைப் புரிந்து கொண்ட அழும்பில்வேளின் முகம் சிவந்தது. தனது பெரும் மீசையைத் தடவி விட்டுக் கொண்டவன் சற்று உஷ்ணமாகவே பதிலளித்தான் :

''மதுரைப் பாண்டியரைத் தவிர்த்து வேறு எவருக்கும் நாங்கள் சிற்றரசாக இருந்ததில்லை. நானும் என்னுடன் கைதான வீரர்களும் காஞ்சி சிறைக்குச் செல்லச் சித்தமாகவே இருக்கிறோம்.''

அவன் வேகத்தைக் கண்ட காலிங்கராயன் முகத்தில் விஷமம் படர்ந்தது.

''ஜடாவர்ம பாண்டியர் மகள் மதுரை அரியணையில் அமர்ந்தாலும் உங்கள் முடிவு இதுதானா?'' என்றான் சோழர் படைத்தலைவன்.

அமைச்சர் அழும்பில்வேளின் முகத்தில் வியப்பு மலர்ந்தது.

''படைத்தலைவர் கூறுவது விளங்கவில்லை?''

''தற்சமயம் உங்களுக்கு விளக்கிக் கொண்டிருக்க எனக்கு அவகாசமில்லை அமைச்சரே. ஆனால் மதுரை அரியணையில் பாண்டியர் மகள் அமரப் போவது உறுதி'' என்றான் காலிங்கராயன்.

அதற்கு மேல் மறுப்பேதும் கூறாத அழும்பில்வேளைத் தனது உபதலைவன் ஒருவனுடன் கோட்டைக்கு அனுப்பிய காலிங்கராயன், முல்லையாற்றின் கரையிலும் தென் எல்லையிலும் கண்காணிக்க வீரர்



''அம்மா! ஏன் தாத்தா இந்த வயசிலே கல்யாணம் பண்ணிக்கிறா?''

''இது தாத்தாவுக்கு அறுபதாம் கல்யாணம் கண்ணு!''

''அப்படின்னா பாக்கி ~59 பாட்டிகள் எங்கே?''

- ஜி. சுந்தரம்

---

களை நிறுத்தினான்.

மீண்டும் சோழர் படை தெற்கு நோக்கிச் செல்ல சித்தமான தருணத்தில், தெற்கிலிருந்து விரைந்து வந்த வீரனொருவன், படைத் தலைவனிடம் ஓலையொன்றை அளித்தான். ஓலையைப் பிரித்துப் படித்த காலிங்கராயன் பெரிதாக நகைத்தான். ஓலையில் இரண்டே வரிகள் இருந்தன.

''மலைக்கணவாயின் முகப்பில் சேரனது உதவிப்படை காத்திருக்கிறது. தங்களை மீண்டும் விழிஞத்தில் சந்திக்கிறேன்'' - சமுத்திரபந்தன்.

கொற்கையின் அந்தப் பழைய அரண்மனை அமளிதுமளிப்பட்டுக் கொண்டிருந்தது. நான்கு மண்டலங்களின் தலைவர்களும், வீரர்களும், தளபதிகளும் நடமாடிக் கொண்டிருக்க, உள் மண்டபத்தில் சாதாரண வீரர் அனுமதிக்கப்படாததால் அங்கு படைத்தலைவர்கள் மட்டுமே காணப்பட்டனர். மந்திராலோசனை நடக்கப் போகும் அந்த மண்டபம் மணிவிளக்குகளாலும், சர விளக்குகளாலும் பிரகாசமாகத் தெரிந்தது. சீலைகளில் பொறிக்கப்பட்டிருந்த பாண்டியர் சின்னங்கள் காற்றில் அலைபாய்ந்து கொண்டிருக்க, வாட்களும் கேடயங்களும் சுவர்களில் தொங்கின. சுவர்களில் வரையப்பட்டிருந்த சித்திரங்கள் பாண்டியரின் பழம் பெருமைகளைப் பறைசாற்றின.

நடுநாயகமாக மாறவர்மனும் மார்த்தாண்டவர்மனும் அமர்ந்திருக்க, கொங்குப் பாண்டியன் ஜெகவீரனும் சோம சுந்தரனும் அடுத்து அமர்ந்திருந்தனர். ஈழத்து பராக்கிரமபாகுவும் குலசேகரனும் சற்றுத் தள்ளியிருக்க, மற்ற தலைவர்கள் எதிரில், அர்த்த சந்திர வடிவத்தில் அமர்ந்திருந்தனர். ருத்திரப் பாண்டியனுக்கான இருக்கையில் அமர்ந்திருந்த சமுத்திரபந்தனது கூரிய விழிகள் சபையை அளவெடுத்துக் கொண்டிருந்தன.

மார்த்தாண்டன் எழுந்ததும் அவை மெல்ல அடங்கியது.

''பாண்டிய மண்டலத்துத் தலைவர்களே, நடக்க இருக்கும் போர் நமது சுதந்திரப் போர். சோழ அதிராஜேந்திரனுக்குப்

# கண்டுணருங்கள்!

அறிமுகப்படுத்துகிறோம் இந்தியாவின் மிகச்சிறந்த டிடர்ஜெண்ட். புதிய ரின் ஸோலரக்ஸ் 3. வேறெந்த இதர பவுடர்கள், வில்லைகளையும் விட மிக மிக சக்தி வாய்ந்த டிடர்ஜெண்ட். மிகச் சமீபத்திய சர்வதேச டிடர்ஜெண்ட் தொழில் நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டிருக்கிறது. எனவே சுத்தம் என்கிற வார்த்தைக்கு உங்களுக்கு முதன் முதலாய் முழு அர்த்தம் புரியும். மேலும் 3 **புரட்சிகர பலன்களை** இது அளிக்கிறது... ஒவ்வொரு முறை பயன்படுத்தும் போதும்! பாருங்கள் இதன் மூன்று பலன்களை :

**1** **கடினமான கறைகளை அகற்றுகிறது ... துருக்கறைகளையும் கூட!** மற்ற சிறந்த டிடர்ஜெண்ட்டுகள் துருக்கறையை இலேசாக்க மட்டுமே செய்யும். ஆனால், துருக்கறையை இருந்த இடம் தெரியாதவாறு **முற்றிலுமாக அகற்றிவிடும் ரின் ஸோலரக்ஸ் 3. துருக்கறையே அகல்கிறதெனில் மற்ற கறைகள் எம்மாத்திரம்?! இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.**



**2** **நிறத்திற்கும் பாதுகாப்பு.** மற்ற டிடர்ஜெண்ட்டுகள், நிறத்தை மங்கச் செய்து விடுகின்றன. ஆனால், நிறத்தை பாதுகாப்பதற்கென்றே விசேஷமான ஃபார்முலாவுடன் தயாரிக்கப் பட்டிருக்கிறது ரின் ஸோலரக்ஸ் 3. எனவே, எத்தனைமுறை வெளுத்தாலும் நிறம் பிரகாசமாய் விளங்குகிறது. **இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.**



**3** **கைகளுக்கும் பாதுகாப்பு.** கடுமையான ஃபார்முலாக்களைக் கொண்டு தயாரிக்கப்படும் டிடர்ஜெண்ட்டுகளிடமிருந்து உங்களுக்கு விடுதலை! ஆம். உங்கள் கைகளுக்கு எந்தவிதமான கெடுதலையும் விளைவிக்காமல், மிகச் சரியான சலவையைத் தருகிறது ரின் ஸோலரக்ஸ் 3. **இதென்ன மந்திரமா, மாயமா? இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3.** இன்றே கொண்டு வாருங்கள் உங்கள் இல்லத்திற்கு, புதிய ரின் ஸோலரக்ஸ் 3-யின் சக்தியை. இதுவரை கிடைக்காத ஸோலரக்ஸ் 3-யின் சுத்தத்துடன் பெறுவீர், மூன்று மிகப்பெரிய பலன்களை ... ஒவ்வொரு முறையும்.



**இதென்ன மந்திரமா, மாயமா?**
**இல்லை. இதுதான் ரின் ஸோலரக்ஸ் 3**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

அறிமுகச் சலுகை

**சேமியீர் ரூ.3/-**

நீங்கள் வாங்கும் 250 கிராம் புதிய ரின் ஸோலரக்ஸ் 3 மீது

பெயர்: ..............................

பின் நாம் தனித்தனி அரசுகளாகப் பிரிந்து ஆட்சி நடத்துகிறோம். ஆனால் நம் தலைநகர் மதுரையை இன்னும் சோழனிடமிருந்து மீட்கவில்லை. சோழ நாட்டின் தற்போதைய நிலை நமக்குச் சாதகமாக இருக்கிறது. சோழன் வடக்கிலிருந்து திரும்புமுன் பாண்டிய நாட்டை முழுவதுமாக மீட்டு மதுரை அரியணையில் மாறவர்மரை அமர வைப்போம். நிலையான அரசை அமைக்கவும் மதுரையை மீட்கவும் நீங்கள் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும். விக்கிரமச் சோழனுக்குத் துணையாக காவற்படைகள் மட்டுமே இருக்கின்றன. நமக்கு உதவ சேரலாதரும் ஈழத்து இளவலும் உறுதி கூறியிருக்கிறார்கள்.''

அவை நிசப்தமாக இருந்தது. கொங்குப் பாண்டி மன்னன் மெல்ல எழுந்தான். ''மார்த்தாண்டரே, இந்த அவையில் பலருக்கும் உள்ள ஒரு சந்தேகத்தை நிவர்த்தி செய்தால் நல்லது'' என்றான். மார்த்தாண்டனுக்கு அவன் கேட்கப் போவது புரிந்தது. ஏதோ கூற வந்த மாறவர்மனைப் பார்வையால் அடக்கியவன், ''தாராளமாகக் கேளுங்கள்'' என்றான்.

''ஜடாவர்ம பாண்டியரின் மகள் ஒருத்தி உறையூரில் விக்கிரமன் பாதுகாப்பில் இருப்பதாக ஒரு செய்தி உலவுகிறதே. அதைப் பற்றி விவரமாகக் கூற வேண்டும்'' என்றான் கொங்கு மன்னன்.

''கொங்குப் பாண்டியரே, அவையோரே, கவனமாகக் கேளுங்கள். உறையூரில் ஒரு பெண்ணை ஜடாவர்மரது மகள் என்று கூறிக் கொண்டு சோழன் வைத்திருக்கிறான். ஆனால் அவள் பாண்டியர் மகள் என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை. நம்மிடையே பிளவு ஏற்படுத்த சோழன் கையாளும் தந்திரம் இது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். எனவே இதைப் பற்றிய குழப்பமேதுமின்றி மாறவர்மரை முழு மனத்தோடு ஏற்றுக் கொண்டு போரில் இறங்குங்கள்.''

மார்த்தாண்டனின் விளக்கம் அத்தனை திருப்தியாக இல்லையெனினும் உபதலைவர்களைப் பொறுத்தவரை அவர்களின் குழப்பம் தீரப் போதுமானதாக இருந்தது.

''உபதலைவர்களே! சேரலாதர் படை மலைக்கணவாய் அருகிலும் உத்தமப் பாளையத்தின் படை கழுகுமலையடிவாரத்திலும் நம்முடன் இணையும். ஈழத்து வீரர்கள் நமது படையுடன் கோட்டாற்றில் காத்து நிற்கின்றனர். எனவே வெற்றி நமக்கே'' என்ற மார்த்தாண்டன், தொடர்ந்து அணிவகுப்பு முறைகளையும் விளக்கினான். அவன் விளக்க விளக்க படைத் தலைவர்கள் முகங்களில் போர் வெறி ஏறத் துவங்கியது.

இறுதியாக, ''கொற்கையைத் தாக்கச் சோழன் கடல் வழியே முயற்சிக்கலாம் என்ற ஐயமிருப்பதால் ஈழத்துக் கலங்களில் பயிற்சி பெற்ற குலசேகரனை கொற்கையின் காவலுக்கு நியமிக்கிறேன். ஈழத்துப் போர்க்கலங்கள் அவருக்கு உதவும்'' என்று முடித்தான் மார்த்தாண்டவர்மன்.

சபை அத்துடன் கலைந்தது. படைத் தலைவர்கள் கோட்டாற்றுக்குக் கிளம்ப ஆயத்தமானார்கள்.

அனைத்தையும் கவனித்தபடி மௌனமாக அமர்ந்திருந்த சமுத்திரபந்தன் அவை கலைந்து சென்றபின்னும் ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். தனது அறைக்குத் திரும்பிய பின்னும் அவன் சிந்தனை கலையவில்லை. சாளரத்தின் வழியே ஆழ் கடலையும், அதில் ஆடிநின்ற பாண்டிய - ஈழத்துக் கலங்களையும் பார்த்தபடி நெடு நேரம் நின்று கொண்டிருந்தான்.

இரவு முதல் ஜாமத்தில் இருள் கவியத் தொடங்கியதும் அரண்மனையை விட்டு வெளியேறிய சமுத்திரபந்தன், கடற்கரையை நாடிச் சென்றான். பரதவர் குடிசைகளைக் கடந்து சென்றவனைக் கீழே கிடந்த வலைகளும் கட்டுமரங்களும் வரவேற்றன. வீடு திரும்பிய பரதவர் வியாபாரம் முடிந்துவிட்டதால் ஆங்காங்கே கள் நிரம்பிய கலயங்களுடன் சாய்ந்து கிடந்தனர்.

கடற்கரை மணலில் கால்களைப் பதித்து நிதானமாக நடந்தவன், குடிசைகள் முடிந்த இடத்தில் நின்றான்.

படகொன்றின் மறைவிலிருந்து வெளிப்பட்ட உருவம் ஒன்று அவனை நெருங்கியது.

சுற்றுமுற்றும் பார்த்தபடியே அவனை நெருங்கிய அந்த உருவம் அவனுடன் தாழ்ந்த குரலில் ஏதோ பேசியது. பிறகு கடலில் ஆடி நிற்கும் கலங்களையும் சுட்டிக் காட்டியது.

சமுத்திரபந்தன் அந்த உருவத்திடம் நெடுநேரம் ரகசியம் பேசியதையும் இறுதியாக ஓலைக் குழலொன்றைக் கொடுத்ததையும் குடிசையின் மறைவொன்றிலிருந்து கண்ணிமைக்காது உற்று கவனித்துக் கொண்டிருந்தன இரு கூர் விழிகள்.

(தொடரும்)

---



பெங்குவின் பறவைகளின் காதல் ரொம்ப விசித்திரமானது. ஆண் பறவை தன் மனத்துக்குப் பிடித்த பெண் பறவையின் காலடியில் ஒரு சின்ன கூழாங்கல்லை எடுத்து வைக்கும். பெண் பறவை அதைத் தன் அலகால் எடுத்து விட்டால் இரண்டும் இணைபிரியாத ஜோடியாகிவிடும்!

ஆதாரம் : 'பறவைகளும் வாழ்க்கையும்'

- காவை. ஜெஸ்டர்



# சிரிப்பு அலைகளுடன் ராமாயணக் கதை!

"உலகத்தில் மூன்று பேராவது உண்மை பேசினால் தேவலாம். 1. மந்திரிகள்; 2. வைத்தியர்; 3. வீட்டுக்கு வரும் சாஸ்திரிகள். மந்திரிகளைப் பற்றிப் பேச அவசியமில்லை... (பலத்த சிரிப்பு). வீட்டுக்கு மாப்பிள்ளை வந்திருக்கிறார். வந்ததிலிருந்து சமையல்கட்டையே பார்த்துக் கொண்டிருக்கிறார். வயிற்றுக்கு ஆகுமா, ஆகாதா என்ற யோசனையே இல்லாமல், அதைக் கொண்டு வா, இதைக் கொண்டு வா என்கிறார். மாமனார் டாக்டரிடம் கேட்கிறார். ''என்ன சார் பிரமாதம்? மாப்பிள்ளை இல்லையா? கேட்டால் கொடுக்கிறது தானே?'' என்கிறார். (சிரிப்பு அலை). அமாவாசை தர்ப்பணத்துக்கு வருகிறார் சாஸ்திரிகள். ''தர்ப்பணம் பண்ணி விட்டு காப்பி சாப்பிடணுமா இல்லை முன்னாலேயே சாப்பிடலாமா?'' என்று கேட்கிறார் குடும்பஸ்தர். சாஸ்திரிகள், ''இன்னும் காப்பி சாப்பிடலையோ?'' என்று கேட்கிறார் ரொம்பக் கரிசனமாக! (பலத்த சிரிப்பு)...''

- திருவையாறு அண்ணாசாமி பாகவதரின் ராமாயண சங்கீத உபந்நியாசத்தில் இது ஒரு துளி.

விசுவாமித்திரர் தசரதரிடம் வந்து, வேள்விகளைக் காக்க ராம-லட்சுமணரை அனுப்பித் தருமாறு கேட்பதிலிருந்து, சீதை, ஊர்மிளா திருமணம் முடிந்து மறுபடி தசரதரிடமே அவர்களை ஒப்படைக்கும் வரைதான் உபந்நியாசம்.

அருணாசலக்கவியும், கம்பனும், தியாகராஜரும் வெகு சரளமாக, இவரது இனிமையான குரலில் இடையிடையே வெளிப்படுகிறார்கள்.

நகைச்சுவை ஆங்காங்கே நாசுக்காக இருக்கிறது. திருமணத்துக்கு அழைக்கப்பட்ட செல்வந்தர், எதிர்பாராமல் வந்து விட்டால், பெண் வீட்டுக்காரர், சந்தோஷத்தில் திணறிப் போய், ''நீங்கள் வர மாட்டீர்கள் என்று இருந்தேன் நான்!'' என்று அசடு வழிவதைச் சொல்கையில், குபீரென்று சிரிப்பொலி அலையாகக் கேட்கிறது.

'அண்ணாசாமி பாகவதர் உபந்நியாசத்தை எங்கே கேட்டீர்கள்!' என்று ஆச்சரியத்துடன் பார்ப்பவர்களுக்கு, இவை அத்தனையும் ஒரு மூன்று காசெட்டுகளில் 'எக்கோ' நிறுவனம் வெளியிட்டிருக்கிறது என்ற தகவல் மகிழ்ச்சியைத் தரலாம்.

தியாகராஜர், ராமர் உறங்கும் அழகைப் பற்றிப் பாடிவிட்டு, 'அந்த அழகைப் பார்க்காத கண்கள் இருந்து என்ன பயன்?' என்று கேட்கிறாராம். ''சிலர் நின்றால் அழகு. சிலர் உட்கார்ந்தால் அழகு. சிலரைப் பார்த்தால் அழகு. சிலரைப் பார்க்காமலிருந்தாலே அழகு...'' என்று மறுபடி சிரிக்கச் செய்கிறார் அண்ணாசாமி பாகவதர்.

காலஞ்சென்ற அண்ணாசாமி பாகவதர் பற்றி பின்வருமாறு கூறுகிறார் பாலகிருஷ்ண சாஸ்திரிகள் :

'மாதிரிமங்கலம் கிராமத்தில் நடேசய்யர் என்பவரிடம் அண்ணாசாமி பாகவதர் சங்கீதம் கற்றுக் கொண்ட போது, அவருடைய சகா, மகாராஜபுரம் விசுவநாதய்யர். ஒரு முறை திருவையாற்றில் நடைபெற்ற தியாகராஜ உற்சவத்தில், அவருக்குப் பாலக்காடு மணியே மிருதங்கம் வாசித்தார்! நான்கைந்து தடவை நான் அண்ணாசாமி பாகவதரின் உபந்நியாசத்தைக் கேட்டிருக்கிறேன் என்றாலும் 1942-ல் ஒருமுறை அவர் ஹரிகதை சொல்லுவதைக் கேட்டு எனக்கு உண்டான இன்ஸ்பிரேஷன்தான் நான் இந்த உபந்நியாசத் துறைக்கு வரக் காரணம் என்று சொல்லுவேன்!''

- எஸ்.வி.என்.

"கல்யாணமாகி நாலு மாசம் ஆகலை... அதுக்குள்ளயே இப்படி..." அம்மா வாக்கியத்தைப் பூர்த்தி பண்ணாமல் போனாள்.

மதுமிதாவின்

# மண் புதிது...

அலுவலக வாசலிலேயே அவள் நின்று கொண்டிருந்தாள். இவன் ஸ்கூட்டரை அவளருகில் நிறுத்தினான்.

அவள் முகம் பூவாய்ச் சிரித்தது.

"கரெக்டா வந்துட்டீங்களே... எங்க லேட்டா ஆக்கிடுவீங்களோன்னு பயந்துட்டேருந்தேன்பா...!"

சரயூ சொல்லிக் கொண்டே பின்பக்கம் அமர்ந்தாள்.

"என்ன.... ஒரு காப்பி சாப்பிட்டுப் போகலாமா...?"

சூர்யா கேட்டான்.

"ஸாரிப்பா... நாலரைக்கு மீட்டிங் ஆரம்பிச்சிடுவாங்க...!"

கொஞ்சம் தயங்கினாள்.

சூர்யா திரும்பாமலே சொன்னான்.

"வேண்டாம் சரயூ.... சும்மா கேட்டேன்...!"

"இல்ல... பத்ரி கபேல நிறுத்துங்க...!"

நிறுத்தினான்.

காப்பியை உறிஞ்சிக் கொண்டே கேட்டான்.

"எப்பவும் உங்க இலக்கிய மீட்டிங் ஆறு மணிக்கு மேலதான் நடக்கும்... இன்னைக்கு என்ன நாலரைக்கே...!"

"அது வந்து... இன்னைக்குப் பேசப் போறவரு... ரொம்ப பிஸியானவர்... பெங்களூர்க்காரர்.... இங்க பேசிட்டு நைட்டே ட்ரெயின்ல திரும்பறார்... அதான்...!"

"அப்படியா... நம்ப ரவி வருவானா?"

"வர்றேன்னு சொல்லிருக்கார்....!"

"சரி... நான் எட்டு மணி போல வந்து உன்னை அழைச்சிட்டுப் போறேன்...!"

"வேண்டாம்பா... நானே பஸ் பிடிச்சு வந்துர்றேன்...!"

"நான் வர்றதுன்னா வர்றேன் சரயூ... உங்க வீட்ல உன் அண்ணா உன்னைக் கொண்டு வந்து விட்டுட்டு அழைச்சிட்டு போவான்னு சொல்வே...!"

"அவனுக்கும் லிட்ரேச்சர் இன்ட்ரஸ்ட் உண்டு... ஆனா நீங்க அப்படி இல்லையே...!"

"ஏன் வருத்தமாயிருக்கா சரயூ?"

"ச்சே... ச்சே... அதெல்லாம் கிடையாதுப்பா... ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு டேஸ்ட்... ஆர்க்கிடெக்சர்ல நீங்க பெரிய ஆள்... உங்களோட புதுமையான சிந்தனை... இதெல்லாம் எனக்கு இல்லையே...!"

சூர்யா வாய் விட்டுச் சிரித்தான்.

ரவி யாரோ ஒரு தாடிக்காரரிடம் பேசிக் கொண்டிருந்தான்.

இவர்களைப் பார்த்ததும் சிரித்துக் கொண்டே வந்தான்.

"ஹாய் சூர்யா... வாங்க மேடம்...!"

"வந்துட்டாரா ரவி?"

சரயூ அவசரமாய்க் கேட்டாள்.

"லாட்ஜ்ல இருக்கார்... இன்னும் இங்க வரலை...!"

"அப்பாடி.... நான் லேட்டுன்னு நினைச்சேன்...!"

"நா வரட்டா...!"

சூர்யா கேட்டான்.

"எங்க, வீட்டுக்குத்தானே...?"

"ஆமாம்... கொஞ்சம் டிசைன்ஸ் போடணும்...!"

"சரி... நான் பஸ்லேயோ அல்லது ஆட்டோவுலயோ வந்துடறேன்...!"

"நீயும் இருந்துட்டுப் போயேன் சூர்யா... நல்லாப் பேசுவார்...!"

ரவி கேட்டான்.

"இதெல்லாம் அறிவு ஜீவிங்க சமாச்சாரம்.... என்ன விட்டுடுப்பா...!"

கேலியாய்க் கை கூப்பினான்.

சரயூ வாய் பொத்திச் சிரித்தாள்.

"அதான் என் சார்பில சரயூ இருக்காளே... வரட்டுமா...?"

சரயூ கை அசைத்தாள்.

மனசு சந்தோஷமாயிருந்தது. ஸ்கூட்டரை திருப்பினான். வீட்டில் அம்மா தனியாக இருப்பாள். ஸ்கூட்டரின் வேகம்

கூடியது.

அம்மா முன்பக்கத் தோட்டத்தில் குனிந்து வேலை பார்த்துக் கொண்டிருந் தாள்.

இவன் ஸ்கூட்டர் சப்தம் கேட்டதும் நிமிர்ந்தாள். கையை உதறிக் கொண்டு வந்தாள்.

கேட்டை விலக்கித் திறந்தாள்.

இவன் ஸ்கூட்டரை தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான். அம்மா மௌன மாய்ப் பின்தொடர்ந்தாள்.

''சரயூ... வரலையா...?''

அம்மா கேட்டாள்.

''காலையிலேயே சொன்னாளே... ஏதோ இலக்கியக் கூட்டம்னு...!''

''எப்படி போனா...?''

''நான்தான் கொண்டு விட்டுட்டு வர் றேன்...!''

''திரும்பி வர்றப்ப எப்படி வருவா? நீ போகணுமா...?''

''இல்லே.. பஸ்ல வந்துடுவா...!''

''தனியாவா... ராத்திரி லேட்டா ஆய்ட்டா என்ன பண்றது?''

''நம்ப ரவி இருக்கான்... அவன் அழைச்சிட்டு வருவான்...!''

''ஆமாம்... அவன் ஒரு வேலை இல்லாத பய...!''

அம்மா முணுமுணுத்தாள்.

இவன் முகம் கழுவ பின்பக்கம் போனான்.

முகம் துடைத்துக் கொண்டு வரும் போது அம்மா காப்பி ஆற்றிக் கொண் டிருந்தாள்.

தலை சீவினான். மெல்ல பவுடர் ஒற்றி வான். அம்மா மௌனமாய் காப்பி தம்ளரை நீட்டினாள். இவன் வாங்கிக் கொண்டு அம்மா முகத்தைப் பார்த்தான்.

என்னவோ சொல்ல விரும்புகிறாள்.

''என்னம்மா...?''

அம்மா தயக்கமாய்ச் சொன்னாள்.

''இதெல்லாம் நல்லாவாயிருக்கு சூர்யா?''

''எதும்மா?''

''இப்படி அடிக்கடி இலக்கியக் கூட்டம்னு போய்ட்டு ராத்திரி வர்றது...?''

இவன் மௌனமாயிருந்தான்.

அம்மா ஏதோ சிக்கல் பண்ணுகிறாள்.

''மாசம் ஒரு கூட்டம்தானே நடக் குது...? போய்ட்டு வரட்டுமே... அவங்க ஊர்ல வாரம் ஒரு கூட்டம் நடக்குமாம்... இவளுக்கு இதுல ரொம்ப விருப்பம்...!''

''கல்யாணமாகி நாலு மாசம் ஆகலை... அதுக்குள்ளயே இப்படி...''

அம்மா வாக்கியத்தைப் பூர்த்தி



பண்ணாமல் போனாள்.

இவன் சோபாவில் அமர்ந்தான். புத்தகத்தைப் புரட்டினான். மனசு பதியவில்லை.

அம்மாவிடம் பேச வேண்டும் போலிருந்தது. எழுந்து வெளியே வந்தான். அம்மா வாசலில் ஒரு சைக்கிள்காரனிடம் பேசிக் கொண்டிருந்தாள்.

**சை**க்கிள்காரன் ஒரு மூட்டையைத் தூக்கி வந்து தோட்டத்தில் அம்மா காட்டிய இடத்தில் போட்டு விட்டுப் போனான். இவனுக்கு ஆச்சர்யமாயிருந்தது.

''என்னம்மா மூட்டை இது?''

''செம்மண்ணுடா...!''

''எதுக்கும்மா...?''

''குன்னூர்லேருந்து புதுசா ஒரு ரோஜா செடி வாங்கிட்டு வந்தேனே... அதுக்குத்தான்... அது நம்ப மண்ணுல பிடிக்காதுப்பா... செம்மண்லதான் வளருமாம்... அதான் இவனை அனுப்பிட்டு வரச் சொன்னேன்...!''

''ஏம்மா... சாதாரண ஒரு ரோஜாச் செடிக்கே அதனோட பழைய சூழ்நிலையை உருவாக்கறதுக்காக எங்கேருந்தோ மண் கொண்டு வர்றே... சரயூக்கு அதைச் செய்யக் கூடாதுங்கிற... என்ன நியாயம் இது? சரயூக்கு நம்ப வீடும் புது மண்தானே... அவ இங்க வேர் ஊன்றி வளர நாம் பழைய சூழ்நிலையை உருவாக்கறது தப்பாம்மா...?''

அம்மா செம்மண்ணையே வெறித்துக் கொண்டிருந்தாள்.

தெளிந்து விடுவாள்.

---

# ரிலாக்ஸ்...



''அந்த ஆளு சொன்ன ஜோக் அப்படி ஒண்ணும் சிரிக்க றாப்ல இல்லையே பின்னே எதுக்கு விழுந்து விழுந்து சிரிக்கறே?''

''சிரிக்கலைன்னா உடனே அடுத்த ஜோக் சொல்ல ஆரம்பிச்சிடுவாரு!''

- ஆர். ரமேஷ்பாபு.



''ஏன் ஸார், ஏஸி தியேட்டர்னு போடறீங்க, ஏஸியே காணுமே?''

''சரியான ஆளுய்யா நீ... மைசூர் ரசத்தில, மைசூர் எங்கேன்னு கேட்பே போலிருக்கே...?''

- ஆர். வசந்தகுமார்.



''நம்ப குருநாதர் சீக்கிரம் சம்சாரத்துக்கே திரும்பிடுவார்னு எப்படி அவ்வளவு நிச்சயமாச் சொல்றே?''

''தன் பேரை 'சுவாமி சபலானந்தா'ன்னில்ல வைச்சுக்கிட்டிருக்கார்!''

- ஏ.கே. பிரசாத்




''ஹலோ...! B-1 போலீஸ் ஸ்டேஷன்?''

''யெஸ்!''

''இங்கே ஒரு கும்பல் கம்பு, அரிவாளோடு வந்து மிரட்டறாங்க. உடனே வரமுடியுமா?''

''எந்த இடத்துக்கு வரணும்?''

''B-2 போலீஸ் ஸ்டேஷனுக்கு!''

- தனலக்ஷ்மி.

# ஆயிரமாயிரம் குழந்தைகளின் அப்பா!





ஒரு கல்லூரி நூலகருக்கு என்ன சம்பளம் இருக்கும்...? எட்டாயிரத்து சொச்ச ரூபாய்! அதில் வெறும் அறுநூறு ரூபாயை மட்டும் தமது செலவுக்கு வைத்துக் கொண்டு மிச்சத்தை அப்படியே குழந்தைகள் நலனுக்குச் செலவழித்தால்...? 'ஏதாவது நடக்கற கதையா பேசுங்க...' என்கிறீர்களா? இது நடந்து கொண்டிருக்கிற கதைதான் -

அவர் பெயர் பா. கல்யாண சுந்தரம்... ஸ்ரீவைகுண்டம், குமரகுருபரன் கல்லூரியில் நூலகர்.

தூய கதராடை, சிரிக்கும் கண்கள், தும்பைப் பூவாய் நரைத்த தலை... தமது இலட்சிய வாழ்க்கைக்கு மிகச் சுலபமாக விளக்கம் தருகிறார் கல்யாணசுந்தரம் :

''தமிழ்நாட்டிலே ஏழாயிரம் கிராமப் பள்ளிக்கூடங்கள்ல அடிப்படை வசதி கூட இல்லைங்க... அப்படி இருக்கையில நான் ஆயிரமாயிரமா செலவு செய்து சொகுசா வாழ்க்கை நடத்தறது நியாயமாகுமா...? என் அடிப்படைத் தேவைகளுக்கு மட்டும் பணம் வைச்சுக்கிட்டு மிச்சத்தைக் கடந்த முப்பத்தஞ்சு வருஷங்களாகவே -குழந்தைகளுக்காக ஒதுக்கி வர்றேன்...''

- இப்படிச் சொல்லும் கல்யாணசுந்தரத்துக்குக் குடும்பப் பொறுப்பு கிடையாது. இரு மணம் செய்து கொள்ளவில்லை. குடும்ப நண்பர்களான தெய்வநாயகம் - அலமேலு தம்பதி இவரைத் தந்தையைப் போல் பேணி, பராமரிக்கிறார்கள்.

கல்யாணசுந்தரத்துக்குக் குழந்தைகள் மீது ஏன் தனி அக்கறை...?

''எங்களுக்கு மேலக்கருவேலங்குளம் கிராமம்தான் சொந்த ஊர். நான் குழந்தையா இருக்கும்போதே அப்பா காலமாயிட்டார். அதனால் தனிமையிலே வளர்ந்தேன்... என்னைப் போன்ற குழந்தைங்களுக்கு நல்ல வாய்ப்புகள் மறுக்கப்படறதைப் பார்த்தேன். அவங்க படிக்கறதுக்கு வசதி இல்லை... அதனால் சுமார் பத்து வயசு இருக்கும்போதே குழந்தைகளுக்காகப் பாடுபடணும்னு முடிவு பண்ணிட்டேன்.

''1965ல சென்னைக்குப் படிக்க வந்த போதுதான் International Children's Welfare Associationங்கற அமைப்பை



''ஆவிகளை மையமா வெச்சு நீங்க ஒரு நாவல் எழுதியிருக்கீங்களே, அதைப் படிச்சேன். ரொம்ப பிரமாதமாயிக்கு.''

''அப்படியா, சந்தோஷம். ஆமா நீங்க எங்கேயிருந்து வர்றீங்க?''

''கல்லறைக்குள்ளேயிருந்து.''

- டி.எஸ். பாலகிருஷ்ணன்.



''கரெக்டா ஐந்து மணிக்கெல்லாம் எழுந்துடுவேன்.''

''அவ்வளவு சீக்கிரம் எழுந்து என்ன பண்ணுவீங்க?''

''ஆபீஸிலிருந்து இருட்டறதுக் குள்ளே பஸ்ஸைப் பிடிச்சி வீட்டுக் குப் போகணுமே...''

- கே. ரமேஷ்ராம்.

''பெரிய பங்களாவுக்குள்ள நுழைஞ்சு வெறும் குத்து விளக்கை மட்டும் திருடி யிருக்கியே... ஏன்?''

''ஒரு சென்டிமெண்ட்டுக்காகத் தான்! முதல் திருட்டு பாருங்க....!''

- அம்பை தேவா.



ஆரம்பிச்சேன். காமன்வெல்த் நாடுகள் எல் லாம் இதுல உறுப்பினர்கள். ஏழை குழந் தைகளுக்கும் ஆதரவற்ற குழந்தைகளுக்கும் உதவறதுதான் இதன் நோக்கம்.''

**போ**ன வருடம் தமிழகத்தின் தென் மாவட்டங்களில் வெள்ளம் ஏற்பட்டு நிறைய சேதமானது நினைவிருக்கும். கல் யாணசுந்தரம் சமூகநல அமைப்புகளின் உதவியுடன் வெள்ளம் பாதித்த இடங்களில் என்ன சேதம் என்பதை மதிப்பீடு செய்தார். சுமார் பத்தாயிரம் குழந்தைகளுக்கு உடனடி யாகப் பள்ளிச் சீருடை, புத்தகங்கள், பேனா, பென்சில் போன்றவை வாங்கித் தந்தால்தான் அவர்கள் படிப்பைத் தொடர முடியும் என்று தெரிய வந்தது. இதுதவிர பல குழந்தைகள் வெள்ளத்தில் பெற் றோரை இழந்தும், காயமடைந்தும் நோயுற் றும் அவதிப்பட்டனர். இவர்களுக்கும் அவ சர உதவி தேவைப்பட்டது.

நிவாரணம் தேட ஒரு சூறாவளி முயற் சியை மேற்கொண்டார் கல்யாணசுந்தரம். தனியார் நிறுவனங்க ளிடமும் தொழிலதி பர்களிடமும் நிலைமையை ஆதாரங்களு டன் விளக்கிப் பணம் சேகரித்தார். தமது சொந்த வருமானத்தையும் அத்துடன் சேர்த் தார். எண்ணம் செயலாவதற்குத் தேவை யான அலைச்சலையும் உழைப்பையும் வழங்கி, பத்தாயிரம் குழந்தைகள் தொடர்ந்து படிக்க உதவியிருக்கிறார்.

**க**ல்லூரி ஆசிரியர்களுக்கான சம்பளம் உயர்த்தப்பட்ட போது கல்யாணசுந்தரத் துக்கு லட்ச ரூபாய்க்கும் அதிகமாக நிலு வைத் தொகையாகக் கிடைத்தது. இந்தத் தொகையை அப்படியே ஆதரவற்ற குழந் தைகள் நல நிதிக்கு வழங்கினார் கல்யாண சுந்தரம்.

ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள சி.ப. ஆதித்தனாரின் பூர்விக வீட்டைக் குழந்தை கள் நூலகமாக அமைக்கும் திட்டம் ஒன்றை வரைந்து அவரது குடும்பத்தாரிடம் கொடுத் தார் கல்யாணசுந்தரம். அவர்களும் அதை ஏற்றுச் செயல்படுத்தவுள்ளனர்.

குழந்தைகளுக்கென்றே தனி நூலகம் என்பது கல்யாணசுந்தரத்தின் பல கனவு களில் ஒன்றுதான். குழந்தைகள் பல்கலைக் கழகம் உள்ளிட்ட பல இலட்சியங்களை நோக்கி முனைப்புடன் நடந்து கொண் டிருக்கிறார் இந்த அதிசய மனிதர்.

- நிருபர்

## வட்ட மேஜை

வட்ட மேஜை

வட்ட மேஜை

◆ அட்டையில் யோக பூமி அறிவிப்புக்கு ஷ்யாம் வரைந்த ஓவியம் அருமை.

மானாம்பதி, பா. பசுபதி.

◆ இவ்வாரத் தலையங்கத்தை நம் முதல்வர் படித்திருப்பார் எனில், மயக்கம் போட்டு விழுந் திருப்பார். குட்ட வேண்டிய நேரத்தில் குட்டி, சூட்ட வேண்டிய நேரத்தில் (பூ மாலை) சூட்டத் தவறுவதில்லை கல்கி. நடு நிலையுடன் எழுதப் பட்ட தலையங்கம். பாராட்டுக்கள்.

சேலம், எம்.கே. சக்திவேல்.

◆ அறிஞர் அண்ணா பதவிக்கு வந்த பின்தான் பிரிவினை வாதத்தைக் கைவிட்டார் என இவ் வாரத் தலையங்கத்தில் எழுதியுள்ளீர்கள். இது தவறு. 1962 - ல் நடைபெற்ற சீன யுத்தத்தின் போதே கை விட்டதுடன், யுத்த நிதியும் வசூலித் துத் தந்தார்.

நெய்வேலி, ஜி. முருகையன்.

◆ ஜெ.பி.சியைப் பற்றி ஏறத்தாழ எல்லாப் பத்திரிகைகளும் மறந்துவிட்ட இச்சமயத்தில், மிர்தாவின் சந்திப்பு, அவரைப் பற்றி பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள உதவியது. இவ்வளவு நேர்மையான தலைவரைக் கொண்ட இக்குழுவாவது உண்மையான குற்றங்களை ஆராய்ந்து அறிக்கையைத் தாக்கல் செய்யும் என்று நம்புவோம்.

மணக்காடு, வை. பாலசுப்பரமணியன்.

◆ மருதுவின் அட்டகாசமான ஓவியத்தோடு, தீக்குளித்தல் பற்றிய உங்கள் கட்டுரை மக்களின் விழிப்புணர்வைத் தூண்டும் மற்றொரு காரியம்.

மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ தீக்குளிப்புக் கட்டுரை - அருமையான ஆலோசனை. இதில் ஒரு செய்தி தவறானது. கண்ணகி மதுரையை எரித்து விட்டுத் தானும் தீயில் மாண்டு போனாள் என்பது தவறு. மதுரையை எரித்து விட்டு மேற்கு நோக்கிச் சென்று, நெடுவேள் குன்றத்தின் உச்சியை அடைந்து, தேவ விமானத்தில் ஏறி மறைந்தாள் என்பது சிலப்பதிகாரம்.

திருமங்கலம், அ. சண்முகக்கனி.

◆ 'சந்தர்ப்பம்' சிறுகதை மூலம், செய்ய வேண்டியதைச் செய்ய வேண்டிய நேரத்தில் செய்து முடிக்கத் தவறினால் கவலை இருக்காது என்னும் வாழ்க்கைத் தத்துவத்தைச் சுலபமாக புரிய வைத்துள்ளார், பாலுகுமார்.

கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

◆ ஆத்மாவுக்கு ஆபத்து - இலக்கியத் தரத்தில் ஓர் அருமையான ஸயின்ஸ் ஃபிக்ஷன்.

ஸ்ரீவைகுண்டம், ஸ்ரீவை ஸ்ரீவித்யா.

◆ தலிவி சாஸ்திரியின் புதுமைச் சிந்தனைக்கு இடம் ஒதுக்கிய கல்கியை எவ்வளவு பாராட்டி னாலும் தகும்.

இராஜாக்கமங்கலம், கே. மணிகண்டன்.

◆ நாஞ்சில்முதன் எழுதிய 'கிராமத்து நிஜங் கள்' கதையில் வரும் ஆசிரியர் பாத்திரம் மிகவும் கொடுமையாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இந்த மாதிரியும் ஓர் ஆசிரியர் இருப்பாரா? கண்டிப்பாக இருக்க மாட்டார்.

வடகரை, பாலு.

◆ 'கிராமத்து நிஜங் கள்' என்ற கதை சுமார் 30 வருடங்களுக்கு முன் எனக்கேற்பட்ட அனு பவத்தை விவரிப்பது போல் இருந்தது.

சென்னை - 18, சீதா சக்ரவர்த்தி.

◆ தற்போது சமூகப் பிரச்னைகளுடன் கூடிய கதைகளும் கட்டுரைகளும் அதிக அளவில் இடம் பெறுவதால் கல்கியை 'மக்கள் பத்திரிகை' என்று கூறத் தோன்றுகிறது.

திருவட்டார், தா. சிந்துகுமார்.

◆ 'ராஜாளி' பற்றிய வர்ணனை, புதுக்கவிதை யாக இனித்தது.

மதுரை - 9, இரா. கல்யாணசுந்தரம்.

◆ தமிழனையும் தமிழகத்தையும் தலை நிமிரச் செய்த தேசிய பளுதூக்கும் சாம்பியன் அருளுக்கு எனது பாராட்டுக்கள். அருளின் சிஷ்யை சோபனாவின் சாதனைக்கும் சேர்த்துத்தான்.

சென்னை - 91, த. பாலசங்கர்.

# முதல்வர் படித்திருப்பாரா?

◆ 'துரியோதனன் விவகாரம்' - இப்படி கல்கி போன்ற தரமான பத்திரிகையில் வந்ததால் ஒரு சரியான முடிவுக்கு வரும் என்று நம்பலாம். கார ணம், பஞ்சாயத்து முடிவை விட பத்திரிகையின் முடிவு நல்லதாகவேயிருக்கும்.

அன்னனூர், எஸ்.ஆர். ஹரிஹரன்.

◆ அரக்கோணம் பற்றிய தகவல்களைப் படித் தேன். நகரின் பிரச்னைகளை எழுதி இருப்பது மட்டற்ற மகிழ்ச்சி. எங்கள் ஜோதி நகர் வீட்டு வசதிவாரியக் குடியிருப்புப் பகுதிகளையும் தாங் கள் விசிட் செய்து பார்த்திருக்கலாம். குடி தண் ணீர் வசதி இல்லை, தெரு விளக்கு எரிவதில்லை, கழிவு நீர் செல்ல வசதி இல்லை, சுகாதாரம் இல்லை. எங்கு நோக்கினும் முட்புதர்கள். எங் கள் அவல நிலை நீங்க, வீட்டு வசதி வாரியத்திட மும், அரக்கோணம் நகராட்சியிடமும் முறை யிட்டும் மனு கொடுத்தும், போராட்டம் நடத் தியும் பலன் இல்லை.

அரக்கோணம், ச.பொ. குட்டியப்பா.

◆ ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில் தேர், அடிக்கடி மண்ணில் புதைந்து விடுவதாகக் குறிப் பிட்டுள்ளீர்கள். (கல்கி, 15.8.93) பி.எச்.இ.எல். பொருத்தித் தந்த தேரின் சக்கரங்கள் எஃகினால் செய்யப்பட்டவை என்றாலும், அவற்றின் எடை பழைய மரச் சக்கரங்களின் எடையுடன் ஒப்பிடும் போது மிகவும் குறைவே. ஆகவே எஃகுச் சக்கரங் களின் கூடுதல் எடையால் தேரின் எடை அதிகரித் துத் தேர் புதையுண்டு போனதாகக் கூற இயலாது.

திருச்சி, ஆர். உதயபாஸ்கர் ராவ்.

''என்னைக் காப்பாற்றப் பார்த்த கிழப்பறவையைக் கொன்ற சூரனே, ஆசிரமத்தில் என்னென்ன வீரமும் சாமர்த்தியமும் பேசினாய்? யுத்தம் செய்யத் தைரியமில்லாத நீசனே! நீ பெருமையாகச் சொன்ன உன் குலத்துக்கு அவமானம் இழைத்தாய்!''

ராஜாஜி எழுதிய

# சக்கரவர்த்தித் திருமகன்

## 51. சிறை வாசம்

கோபத்தாலும் துயரத்தாலும் வாட்டப்பட்ட சீதை, தன் சிவந்து போன கண்களை நன்றாகத் திறந்து, அரக்கன் முகத்தைத் தைரியமாகப் பார்த்துச் சொன்னாள் :

''நீசனே! உன் பெயரையும் குலத்தையும் வீரப் பிரதாபங்களையும் என்னிடம் மிகக் கம்பீரமாகச் சொல்லிக் கொண்டு, எவ்வளவு பெரிய சூரனாக நடந்து கொண்டாய்? வெட்கமில்லையா உனக்கு? பக்கத்தில் யாருமில்லாத சமயம் பார்த்து ஒரு ஸ்திரீயைத் தூக்கி ஓடும் சூரனே! எத்தனை பெரிய வீரன் நீ. ராமன் இல்லாத சமயம் பார்த்து வெட்கமில்லாமல் திருட்டு வேலை செய்தாய்!

''என்னைக் காப்பாற்றப் பார்த்த கிழப் பறவையைக் கொன்ற சூரனே, ஆசிரமத்தில் என்னவென்ன வீரமும் சாமர்த்தியமும் பேசினாய்? யுத்தம் செய்யத் தைரியமில்லாமல் திருட்டு வேலை செய்த உன் புகழை, உலகம் என்றென்றும் புகழுமல்லவா? நீசனே! நீ பெருமையாகச் சொன்ன உன் குலத்துக்கு அவமானம் இழைத்தாய்!

''நீ என்ன சம்பாதிக்கப் போகிறாய், என்னை இப்படி எடுத்துக் கொண்டு வேகமாக ஓடிப் போய்? எத்தனை நாள் பிழைத்திருக்கப் போகிறாய்? வெகு சீக்கிரம் என் நாதனுடைய வில்லிலிருந்து பாயும் சரங்கள் உன் உடலில் புகுந்து உன் உயிரை மாய்க்கப் போகின்றன. என் நாதன் பார்வையில் நீ சிக்கினால் போதும், அப்போதே நீ மாண்டாய்! தப்பிப் பிழைத்தாய் என்று எண்ணாதே! நிச்சயமாய் மாள்வாய். உன் அயோக்கியப் பிரயத்தனமெல்லாம் உனக்கு என்ன நன்மை தரப் போகிறது? ஒருநாளும் என்னை நீ அடைய மாட்டாய். உயிர் நீப்பேனே யொழிய உனக்கு வசப்படேன். என் நாதன் உன்னை விட மாட்டான். அவன் கோபத்தைச் சம்பாதித்த நீ பிழைக்க மாட்டாய். நிச்சயமாகக் கொல்லப் படுவாய். வெகு சீக்கிரமாகவே நரகத்தில் வைதரணீ நதியைப் பார்க்கப் போகிறாய். பழுக்கக் காய்ச்சிய இரும்புப் பிரதிமை உனக்காகக் காத்திருக்கிறது. அதைத் தழுவிக் கொள்ளப் போகிறாய். இரும்பு முள்ளுகள் கொண்ட மரமும் உனக்காகவே நரகத்தில் இருக்கிறது. ஒரு முகூர்த்தத்தில் ஜனஸ்தானத்தில் உன்னுடைய பதினாலாயிரம் அரக்கர்களைத் தேரின்றி ஒருவனாக நின்று அழித்த என் ராமன் உன்னை விடப் போகிறானா? உனக்காகக் காத்திருக்கும் யமனிடம் உன்னைச் சீக்கிரம் ஒப்புவிப்பான்.''

இவ்வாறு சீதை பலவிதமாக இகழ்ந்தும் தாக்கியும் எச்சரித்தும் சொன்னதை, அரக்கன் காதில் போட்டுக் கொள்ளாமல், ஆகாய மார்க்கமாக

லங்கை நோக்கி வில்லிலின்று பாயும் அம்பைப் போலத் தேரின்றிப் பறந்தே விசையாகச் சென்றான்.

பல மலைகளையும் ஆறுகளையும் தாண்டிச் செல்லும்போது, வழியில் ஒரு மலைமேல் யாரோ நிற்பதைக் கண்டாள் சீதை. அப்பொழுது மேலுத்திரியத்தை எடுத்துத் தன் ஆபரணங்களை அதில் முடித்துக் கீழே போட்டாள். ராமன் தன்னைத் தேடுவான்; தன்னை எடுத்துப் போன வழி அவனுக்குத் தெரிய வேண்டும் என்று இவ்வாறு செய்தாள். அழுது கொண்டிருந்த அவளைக் கீழே மலைமேலிருந்த வானரங்களும் பார்த்தன.

பம்பையைத் தாண்டிப் பிறகு கடலையும் ராவணன் கடந்து லங்காபுரி பிரவேசித்தான். துயரத்தால் துடித்துக் கொண்டிருந்த சீதையுடன் தன் அந்தப்புரம் அடைந்தான். ஒரு பெண்ணுருவம் கொண்டு தன் உயிரைக் குடிக்க வந்திருந்த அந்தகனை எடுத்துக் கொண்டு தன் அந்தப்புரம் புகுந்தான். 'சீதையை அடைந்து விட்டேன்' என்று மூர்க்கன் எண்ணினான்.

உடனே பிசாசுகளைப் போன்ற சில கோர ராக்ஷசிகளைக் கூப்பிட்டு, "இவளை நீங்கள் வெகு ஜாக்கிரதையாகக் காவலிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று ஆணையிட்டான்.

"என் உத்தரவு இன்றி ஆணாவது பெண்ணாவது எவரேனும் இவளிருக்குமிடம் அண்ட விடாதீர்கள்!" என்று கண்டிப்பாக உத்தரவு செய்தான்.

"இவள் என்ன இச்சித்தாலும் வஸ்திரமோ, பொன்னோ, மணியோ, எதுவாயினும் அவளுக்குக் கொடுத்து சந்தோஷப்படுத்த வேண்டும். எனக்குச் செய்யும் பணிவிடையும் மரியாதையும் இவளுக்கு நடக்க வேண்டும்" என்று உத்தரவிட்டான்.

"யாராவது அவள் மனம் துன்புறும் பேச்சுப் பேசினால் கொன்று விடுவேன். தெரிந்தோ தெரியாமலோ அவளுக்குக் கோபமோ கஷ்டமோ உண்டாகும் பேச்சு யாரும் பேசக் கூடாது. ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான்.

சீதையை அந்தப்புரத்தில் ஒரு இடத்தில் இறக்கிவிட்டு, இனி என்ன செய்ய வேண்டியது என்று யோசிக்கலானான். சாமர்த்தியமான சாரர்களை அழைத்து உத்தரவிட்டான். "நீங்கள் உடனே கரன் இருந்த ஜனஸ்தானம் போய் அங்கே பயப்படாமல் ராமன் என்ன செய்து வருகிறான் என்பதை நன்றாகக் கவனித்து வர வேண்டும். அந்த ராமன் இருக்கும் வரையில் எனக்குத் தூக்கம் வராது. அவன் எனக்குப் பெரிய சத்துரு. அவன் எப்படியாவது சாக வேண்டும். நீங்கள் போய்த் தைரியமாக உங்கள் வேலையைச் செய்ய வேண்டியது" என்று உத்தரவிட்டான்.



கடலால் சூழப்பட்ட ஒரு கோட்டைக்குக் கொண்டு வரப்பட்டு எவ்வளவு தூரத்தில் தான் சிறை கிடக்கிறாள் என்பதை சீதை உடனே அறியவில்லை. தன்னுடைய நாதனான வீரன் உடனே வந்து ராவணனைக் கொன்று மீட்பான் என்றே எதிர்பார்த்தாள். ஆனபடியால் மிகவும் துன்பப்பட்டவளாயினும், தன்னுடைய சித்தத்தைத் திடம் பண்ணிக் கொண்டு, தன் நாதனுடைய வீரத்தையும் சாமர்த்தியத்தையும் பூரணமாக நம்பித் தைரியமாகவே இருந்தாள். அரக்கன் தன்னிடை மிருகத்தனமாக நடந்து கொள்ள வில்லையென்பதையும் கண்டு ஒருவாறு ஆறுதல் அடைந்தாள்.

சாரர்களை ஜன ஸ்தானத்துக்கு அனுப்பிவிட்டு, ராவணன் சீதை இருந்த அந்தப்புரம் பிரவேசித்தான். அவள் சோகத்தில் மூழ்கிக் கண்ணீர் நிறைந்த கண்களோடு இருப்பதைக் கண்டான். ராக்ஷசிகள் தங்கள் காவல் வேலையைச் சரியாகச் செய்து வருவதையும் பார்த்தான். சரி, தன் செல்வத்தையும் அந்தஸ்தையும் அவள் பார்க்க வேண்டும். பார்த்த பின் நிச்சயமாகத் தனக்கு உடன்படுவாள் என்று எண்ணி அதற்கு ஏற்பாடு செய்தான்.

அவனுடைய பெரிய அரண்மனைக்குள் கொண்டு போகப்பட்டு, அங்குள்ள சிறப்பும் செல்வமும் காண்பிக்கப்பட்டாள். ராவணனுடைய சம்பத்தும் ராஜ போகங்களுக்குரிய பொருள்களும் உலகத்தில் வேறு எந்த அரசனும் பெற்றதில்லை. சீதைக்கு எல்லாவற்றையும் காண்பித்தார்கள். இதைக்

கண்டு தன்னை மோகிப்பாள் என்று அரக்கன் எண்ணினான்.

எங்கு பார்த்தாலும் பொன்னும் மணியும் பட்டும்; எங்கு பார்த்தாலும் கண்ணைக் கவரும்படியான விசித்திர வேலையோடு அமைந்த மண்டபங்கள், விமானங்கள், மேடைகள், ஆயிரக் கணக்கான வேலைக்காரிகள், செல்வத் தாலும் ராஜ்யாதிகாரத்தாலும் உண் டாகக் கூடிய எல்லாவித சம்பத்தையும் லங்காபுரியில் ராக்ஷசேச்வரனுடைய அரண்மனையில் கண்டாள். ஆனால் சீதையின் மனம் வேறு எங்கேயோ இருந்தது. தன்னுடைய பெருஞ் செல் வத்தையெல்லாம் அவளுக்குக் காட்டி விட்டு, அவளிடம் பேச ஆரம்பித்தான். தன் சேனையின் ,பெரும் கணக்கைச் சீதையிடம் சொன்னான்.

அவளோ முன்னமேயே ராவண னுடைய வீரியத்தைப் பற்றித் தன் அபிப் பிராயத்தைச் சொல்லி விட்டாளே! ஆயி னும் வெட்கமில்லாமல் தன் சேனா பலத்தைப் பற்றி எடுத்துச் சொன்னான். ''இதையெல்லாம் நீ உன்னுடைய பொருளாகவும் உன்னுடைய ராஜ்யமா கவும் வைத்து அனுபவிக்கலாம். என் பிராணனை விடச் சிறந்தவளாக எனக்கு நீ ஆவாய். என்னுடைய மனைவிகள் பலபேர். ஆயினும் அவர்கள் அனை வருக்கும் நீ எஜமானியாக என்னுடைய அன்பு முழுவதும் பெற்று விளங்கு வாய். நான் சொல்வதைக் கேள். வேறு யோசனை செய்யாதே. என் இஷ்டத் தைப் பூர்த்தி செய்வாயாக. நூறு யோஜனை தூரத்தில், இந்த லங்காபுரி யானது சமுத்திரத்தால் சூழ்ந்து, ஆயிரக் கணக்கான மகா வீரர்களால் காக்கப் பட்டு வருகிறது. இங்கே யாரும் பிரவே சிக்க முடியாது.

''தேவாசுரர்களில் எனக்குச் சம மான சக்தி கொண்டவர்கள் யாருமே யில்லை. இது தேவாசுரர்கள் அறிந்த விஷயம். ராஜ்யத்திலிருந்து துரத்தப் பட்ட ஒரு அற்ப மானிடன், வனத்தில் தவமிருக்க நிச்சயித்திருக்கும் ஒரு திக் கற்றவன், அவனைக்கட்டிக் கொண்டு நீ என்ன சுகம் அடைவாய்? உன் அழகுக் குத் தகுந்த சம்பத்துள்ள புருஷன் நான். சுகம் அனுபவிக்கும் யௌவனப் பரு வத்தை வீணாக்கிக் கொள்ளாதே. ராமனை நீ மறுபடியும் பார்க்கப் போவ தில்லை, அதைப் பற்றிச் சந்தேகம் வேண்டாம். ஒருநாளும் ராமன் இங்கே அண்ட முடியாது. என்னுடைய ராஜ் யம் முழுவதும் உன்னுடையதாக வைத் துக் கொண்டு என்னுடன் அனுபவிப்பா யாக. நானும் எனக்குட்பட்டுக் கிடக் கும் தேவர்களும் உன் அடிமைகளா வோம். என் முக்கிய பட்டமகிஷியாக அபிஷேகம் செய்யப்படுவாய். உனக்கு ஒரு குறைவுமிருக்காது. இதுவரையில் பூர்வ கர்ம விசேஷத்தால் கஷ்டங்களை அனுபவித்தாய். இனிமேல் உன் புண் ணிய கர்மங்களின் நற்பயனை என் னுடன் அனுபவிக்கப் போகிறாய். லங் கையை ஆளப் போகிறாய். குபேரனை ஜெயித்த லங்கேசன் மனைவியாவாய். புஷ்பக விமானத்தில் ஏறி நாம் இஷ்டப் படி சஞ்சரிப்போம். உன் அழகிய முகத் தில் துக்கம் காணப்படக் கூடாது. சந் தோஷமாக இருப்பாயாக'' என்றான்.

**ரா**வணன் இவ்வாறெல்லாம் பேசும்போது சீதையின் கண்களில் தாரை தாரையாக நீர் பெருகிற்று. புடை வையின் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டாள். தன் பயத்தை அரக்கர்கள் காணாமலிருப்பதற்காக இவ்வாறு செய்தாள்.

''நீ சங்கோசப்படாதே! என்னை ஒப்புக் கொள்வதில் பாபம் இல்லை. கூச்சம் வேண்டாம். தெய்வத்தால் ஏற் பட்ட நிலையை ஒப்புக் கொள்ளலாம் என்பது சாஸ்திரம். அழகியே! என் தலையை உன் பாதங்களில் வைத்துக் கேட்டுக் கொள்ளுகிறேன். எனக்கு அருள்வாய். நான் உனக்கு அடிமை. என் பதவியை யும் மறந்து நான் உன்னிடம் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளு கிறேன். என்னுடைய வாழ்நாளில் யாரையும் இப் படி நான் இறைஞ்சியது கிடையாது.''

இவ்வாறு ராவணன் சீதையை மிக வருந்திக் கேட்டுக் கொண்டான். அவள் ஒப்புக் கொள்வாள் என்றும், அவளை அடைந்து விடுவது நிச்சயம் என்றும் அரக்கன் எண்ணினான்.

(தொடரும்)

''தலைவா... இந்த ஆள் ரெட்டை வேடம் போடறான்...!''

''எப்படி சொல்றே...?''

''சட்டையில் ஸ்டாலின் படம் குத்தி யிருக்கான்; உள்ளே பனியனில்... கோபால்சாமி படம்!''

- ராஜிராதா.



# மூலிகை வருகிறது; எயிட்ஸ் ஓடுகிறது!

**க**ர்நாடக மாநிலம் பெல்காமில் உள்ள ஹுக்கேரி தாலுகாவைச் சேர்ந்த பரசுராம் வைத்யா என்ற ஆயுர்வேத மருத்துவரின் கண்டுபிடிப்பு, எய்ட்ஸ் ஆராய்ச்சியாளர்கள் மத்தியில் புதிய நம்பிக்கையைத் தோற்றுவித்துள்ளது.

இவர் சில மூலிகைகளின் உதவியுடன் தயாரித்துள்ள மருந்தைப் பாலுடன் கலந்து ஒரு நாளைக்கு மூன்று வேளை உட்கொள்ள, எய்ட்ஸ் நோயாளிகளின் நிலைமையில் அபரிமிதமான முன்னேற்றம் கண்டுள்ளதாகச் சொல்லப்படுகிறது. விஷயம் இந்திய மருத்துவக் கவுன்சிலுக்குத் தெரிவிக்கப்பட, (Indian Council of Medical Research - ICMR) இவரது மருந்து ரசாயன அடிப்படையில் ஆய்வு செய்யப்பட்டு வருகிறது. இந்திய எய்ட்ஸ் தடுப்பு நிறுவனம், டாக்டர்கள் குழு ஒன்றை பெல்காமுக்கு அனுப்பி வைத்தது.

பரசுராம் வைத்யாவின் குடும்பம் பரம்பரை பரம்பரையாக ஆயுர்வேத வைத்தியத்தில் ஈடுபட்டு வருகிறது. (187 வருடங்களாக!)

வைத்யாவுக்குத் தற்சமயம் முப்பத்து மூன்று வயதுதான் ஆகிறது. என்ன மூலிகைகளை உபயோகித்து இந்த மருந்தைத் தயாரிக்கிறார் என்பதைச் சொல்ல மறுத்துவிட்டார் அவர். தம்மைப் பற்றிய வேறு விவரங்களையும் புகைப்படத்தையும் கூட வெளியிட விரும்பவில்லை. தமக்குக் கிடைக்கப் போகும் வெற்றியையும் அங்கீகாரத்தையும் பொறுத்து, அவர் தம்மை வெளிப்படுத்துவார் என்று தோன்றுகிறது.

## காதலித்தால் ஓரே வெட்டு!

**உ**த்தரப்பிரதேச முஜப்பூர் நகர் மாவட்டத்தைச் சேர்ந்த ஓர் இளம் தம்பதி, காதலித்து மணந்த குற்றத்திற்காக, கிராமப் பஞ்சாயத்தால் விசாரிக்கப்பட்டு, நூற்றுக்கணக்கானோர் முன்னிலையில் சிரச்சேதம் செய்து கொல்லப்பட்டனர்! இதைவிடக் கொடுமை விவசாயிகளின் தலைவர் மகேந்திர சிங் திகாயத், ''இந்தத் தண்டனை நியாயமானதே. கிராமவாசிகள் வாழ்க்கையில் நகரத்தினர் தலையிடுவதைத் தவிர்க்க வேண்டும். எங்கள் சட்ட திட்டங்களே வேறு'' என்று கூறியிருப்பது! இந்தியா எந்த நூற்றாண்டின் பக்கம் போய்க் கொண்டிருக்கிறது?



* கொடூரத்தை நியாயப்படுத்தும் திகாயத்

## சும்மா கிடக்கும் சூப்பர் கம்ப்யூட்டர்

**அ**ண்மையில் பெய்த மழையால் தில்லியில் இன்னும் 40,000 டெலிபோன் லைன்கள் செயல்படாமல் இருக்கின்றன! இந்தத் துறையின் சில பொறுப்புக்களைத் தனியாரிடம் விட மத்திய அரசு முனைவதை எதிர்த்து, நூற்றுக்கணக்கான தொலைபேசித் துறை ஊழியர்கள் 'சஞ்சார் பவன்' எதிரில் ஆர்ப்பாட்டம் செய்தனர். இதற்கிடையே நாடாளுமன்றத்தில் அமைச்சர் சுக்ராம், ''28 லட்ச ரூபாய் கொடுத்து, 'டெலிகாம் ரிசர்ச் சென்டர்'ருக்காக வாங்கிய கம்ப்யூட்டர் ஒன்று, ஜூலை 1988 முதல் உபயோகப்படுத்தப்படாமல் சும்மா கிடப்பதாக'' ஒப்புக் கொண்டார். பொது

மக்கள் வரிப்பணம் இப்படித்தான் விரயம் ஆகிறது!

## கம்பி நீட்டிய கம்பெனி!

"மின்சாரம், டெலிபோன், குடிநீர் பில்களை ஒரு சிறு கமிஷன் பெற்றுக் கொண்டு நாங்கள் கட்டுகிறோம்" என்று ஃபரீதாபாத்தில் ஒரு நிறுவனம் ஆரம்பித்தது. 'அலைச்சல் மிச்சம்' என்று ஒப்புக் கொண்ட 108 குடும்பத்தினரிடம் பணம் பெற்றுக் கொண்டு இந்தக் கம்பெனியினர் கம்பி நீட்டிவிட, மற்றவர்களுக்கு இச்சம்பவம் ஒரு பாடமாக விளங்குகிறது! இன்று தில்லி குடிமக்கள் 'தங்கள் கைகளே தங்களுக்குதவி' என்கின்றனர்!!

## வால் பகுதி :

மாநில மொழிப்பற்று என்பது இந்தியாவிலேயே கர்நாடகத்தில் எல்லை மீறிப் போய்விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். டீ.வியின் மெல்லிசைப் பாடல்கள் கூட கன்னடமொழியின் புகழை மட்டும்தான் பாடுகின்றன. 'அரசாங்க நடைமுறைகள் பூராவும் கன்னடத்தில் மட்டுந்தான் இருக்க வேண்டும்' என்று சட்டம் போட்டுவிட்டது அரசாங்கம். கன்னடம் தவிர வேறு எந்த மொழியில் - ஆங்கிலம் உட்பட - கடிதங்கள் மனுக்கள் வந்தாலும் திருப்பியனுப்பி விடச் சொல்லி விட்டார் வீரப்ப மொய்லி.

கன்னட சாஹித்ய பரீஷத்திற்கு தற்சமயம் ஆண்டொன்றுக்குப் பதினேழு லட்சம் ஒதுக்குகிறது அரசாங்கம். இதனை முப்பத்தேழு லட்சமாக உயர்த்தி விட்டார்கள்! கன்னட வளர்ச்சிக்காகப் பாடுபவர்களுக்கு ஏகப்பட்ட விருதுகள் வழங்கப்பட உள்ளன.

கர்நாடக எல்லைப் பகுதியைச் சுற்றிலும் கன்னடப் பள்ளிகள் தொடங்கத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. ஆங்கில நர்சரிப் பள்ளிகளுக்கு இனிமேல் அனுமதி மறுக்கப்பட்டு, சிசுவிஹார் என்ற பெயரில் கன்னட நர்சரிகள் தொடங்கத் திட்டமிட்டிருப்பதாகவும் தெரிகிறது.

பெங்களூரிலிருந்து:
**பெர்னாண்டஸ்**

தில்லியிலிருந்து :
**ராஜீவி நரசிம்மன்**

---

# அடுத்த இதழ்...

# ஹ ஹ ஹா ஸ்பெஷல்!

7

சுபா எழுதும்...

# மடிமீது தலை வைத்து...

பொது மருத்துவமனை நோக்கி விரைந்து கொண்டிருந்த கஙிதாவின் வீட்டுக் காரில் இறுக்கமான மௌனம் நிலவியது.

சிங்காரம்தான் காரை ஓட்டிக் கொண் டிருந்தார்.

''பாபுன்னா யார் ரங்கா?'' என்று கஙிதா கேட்டாள். அவள் காரின் பின் இருக்கையில் உட்கார்ந்து இருந்தாள்.

ரங்கா முன்னால் உட்கார்ந்து சாலையை வெறித்துக் கொண்டிருந்தான்.

''உங்களுக்குத் தெரியாது கஙிதா. நீங்க பாத்திருக்க மாட்டீங்க. இத்தனை நாள் அவன் கண்டல் சர்வீஸ்ல இருந்தான். நேத் துத்தான் வேன் சர்வீஸ்"க்கு மாத்தினேன். பேருக்கு ஏத்தமாதிரி பண்ணிட்டான். எப் பப்பாரு எதிலயாவது தலையைக் குடுத்து மாட்டுவான். வேண்டாத வெவகாரங்கள்ல எல்லாம் மூக்கை நீட்டுவான். அதுக்காகவே பையன்க அவனுக்கு அபிமன்யுன்னு பேர் வச்சிருக்காங்க. இப்ப ஆக்ஸிடென்ட்ல....''

கஸ்தூரிரங்கன் அதற்கு மேல் எதுவும் சொல்லவில்லை. அவன் நாக்கு தழுதழுத் தது.

''ஒன்னும் ஆயிருக்காது ரங்கா'' என் றாள் கஙிதா.

''ஒன்னும் ஆயிருக்காது ரங்கா'' என் றார்கள் கஙிதாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந் திருந்த சிறுவர்கள் இருவரும்.

மருத்துவமனை. ஆயிரமாயிரம் வேதனைகளை உள்ளடக்கிக் கொண்டு, வெளியே வெளிர்ப் பூச்சுடன் அமைதியாக அவர்களை வரவேற்றது.

விபத்துப் பிரிவில் கஸ்தூரி ரங்கன் நுழைந் தான். முதல் கட்டிலி லேயே பாபு படுத்துக் கொண்டிருந்தான். தலை யில் கட்டு. கையில் கட்டு. காலில் கட்டு. கட்டுகள் எல்லாம் பயமுறுத்து பவையாக இல்லை.

பக்கத்து ஸ்டாண்டில் இருந்து இரத்தமும், ஸலைன் வாட்டரும் அவன் உடலில் செலுத்தப்பட்டுக் கொண்டிருந்தன.

பாபுவின் அருகில் இருந்து அவன் உடலைப் பரிசோதித்துக் கொண்டிருந்த டாக்டர், கஸ்தூரி ரங்கனின் வருகையால் கவனம் கலைந்தார். அவன் பக்கம் திரும் பினார்.

''ஹலோ டாக்டர்!''

டாக்டரின் பார்வை கஸ்தூரிரங்கன், கஙிதா, கூட வந்த சிறுவர்கள், சிங்காரம் என்று ஒரு சிறு பயணம் செய்து, மறுபடி கஸ்தூரிரங்கனின் முகத்தில் நிலைத்தது.

''ஐ'ம் கஸ்தூரி ரங்கன்.''

''ஓ....'' என்று அடையாளம் புரிந்தவர் போல் கஸ்தூரிரங்கனின் கையைப் பற்றிக் குலுக்கினார். ''ரங்கா?'' என்று ஒரு கேள்விக் குறியோடு ரங்காவை உச்சரித்தார்.

''ஆமா டாக்டர், பாபு?''

''பாபுவுக்கு ஒன்னுமில்லை. ஜோராய் இருக்கான். எங்க வேலையை எல்லாம் நீங்க ரொம்ப சுலபமாக்கிட்டீங்களே ரங்கா.''

''புரியலை.''

''பாபுவோட பாக்கெட்ல ஐடென்டிடி கார்டு இருந்தது. ரத்த குரூப் பி பாஸிடிவ்னு எழுதி இருந்தது. அவன் கூட வந்த பசங் கள்ல பி பாஸிடிவ் ரத்த குரூப்காரன், உடனே ரத்தம் வேணும்னா நான் தரேன்னு ரெடியா நிக்கறான்! விபத்து நடக்கிற சமயங் களில் எல்லாம் நேரந்தான் ரொம்ப முக் கியம். ஒவ்வொரு செகண்டும் விபத்துல அடிபட்டவனோடா தலையெழுத்தையே மாத்திடும். உங்க பையன் கேஸ்ல நாங்க ரொம்ப நிதானமா எங்க வேலையைச் செய்ய முடிஞ்சது. சபரி ஹோட்டல் உங்களது தானாமே....''

''ஆமா டாக்டர்.''

''பாய்ஸ் சொன்னாங்க. எனக்கு உங்களைப் பாக்கணும்னு ஒரு ஆவலே உருவாய்டிச்சி. இவ்வளவு முன்னேற்

''ராக்ஷஸன்லாம் என்னைத் தூக்கிட்டுப் போறாங்க ரங்கா. கடகடன்னு எருமை வண்டி ஓடுது.''

பாடா நீங்க எல்லாமே பண்ணி வச்சிருக் கீங்களே....''

''நீங்க ரொம்ப அதிகமாச் சொல்றீங்க டாக்டர். இதெல்லாம் எங்க ரொட்டீன்ல ஒண்ணு. ஒரு பையனை வேலைக்குச் சேர்த்த வுடனேயே அவனோட ப்ளட் க்ரூப்பைத் தெரிஞ்சிக்கிட்டு ஒரு ஐடன்டிடி கார்டுல எழுதி அவன் பாக்கெட்ல வச்சிடுவோம். மஞ்சக்காமாலை அது இதுன்னு ஏதாவது பின்னணி இருக்கான்னு கேட்டு அதையும் நோட் பண்ணிடுவோம்.''

''வெரி ஐடியல், இல்ல?''

''இல்ல. ரொம்ப சாதாரண ரொட் டீன்.''

''எனிவே... உங்க பையன் ரெண்டு மூணு தரம் உங்க பேரைத்தான் சொல்லிட் டிருந்தான். போய்ப் பாருங்க.''

''நீங்க ஒரு தடவை சபரிக்கு வாங்க டாக்டர்....''

''ஞானப்பிரகாஷ்... அவசியம் வரேன். ஒரு ஸ்வீட், ஒரு ஸாவரி, ஒரு காப்பி, கெடைக்கும் இல்லையா?''

''ஒரு பார்ட்டியே கெடைக்கும்!''

டாக்டர் சிரித்துக் கொண்டே அடுத்த கட்டில் நோக்கி நகர்ந்தார்.

கஸ்தூரிரங்கன் கட்டிலில் படுத்திருந்த பாபுவை நோக்கி நகர்ந்தான். சுசீதாவுக்கு அவனைப் பார்த்தபோது, வாடிய மல்லி கைச் சரம், காஸட்டில் இருந்து உருவி எடுக் கப்பட்ட டேப், துவைத்துக் காயப்போட்ட நீளத்துணி என்றெல்லாம் தோன்றியது.

பாபு. இதுவரை அவள் பார்க்காத முகம். களையாக இருந்தது. பெரிய குண்டுக் கண்கள் மூடியிருந்தன. அதென் னவோ, அபிமன்யு என்ற பெயருக்கு அவன் மிகப் பொருத்தமானவன் என்றும், அபி மன்யு என்ற பெயருக்கு அவன் கொஞ்சம் கூடப் பொருந்தாதவன் என்றும் முரணாக



ஒரு சிந்தனை ஓடியது.

ரங்கா அவன் அருகில் சென்றவுடன் என்னவோ கவிட்ச் ஒன்றை அழுத்திய மாதிரி பாபு கண்களைத் திறந்தான்.

''ரங்கா'' என்றான். அவன் கண்கள் சிரித்தன.

''எப்படிடா இருக்கே? எப்படிடா அடி பட்டே?''

''தெரிலை ரங்கா. சிங்காரம் வேன் கிளப்பறப்ப சக்கரத்துக்கு அடில ஒரு குட்டி நாய் படுத்து இருந்திச்சா. நான் அதைத் தொரத்தினேனா... எப்படி விழுந்தேன்னு தெரியலை. நாய் ஓடிடிச்சா ரங்கா?''

கஸ்தூரி ரங்கன் பின்னால் திரும்பி, சிங் காரத்தைப் பார்த்தான்.

''அது ஓடிப் போய்டிச்சி கண்ணு'' என் றான் சிங்காரம்.

''ராக்ஷஸலெல்லாம் என்னைத் தூக்கிட்டுப் போறாங்க ரங்கா. கடகடன்னு எருமை வண்டி ஓடுது.''

''ஸ்ட்ரெச்சரை சொல்றான் ரங்கா.''

''இல்ல. கண்ணு மூடினா இன்னும் அந்த ராக்ஷஸங்க தெரியறாங்க. நான் கண் மூடிட்டா பக்கத்துல வருவாங்க ரங்கா. நான் செத்துப் போய்டுவேனா ரங்கா?''

''அதெல்லாம் ஒண்ணும் செத்துப் போய்ட மாட்டேடா... சின்னப்பையங்க எல்லாம் சீக்கிரம் சாகமாட்டாங்க. அப் படியே நீ செத்துப் போய்ட்டா நேரா சொர்க் கத்துக்குத்தான் போவே. அங்க சபரிக்கு ஒரு எடம் பாரு. நானும் வந்துடறேன்.''

கவிதா அவன் கையைப் பற்றினாள். அழுத்தினாள்.

''ரங்கா, என்ன இது?'' என்றாள். அவள் குரலில் உடைந்து நொறுங்கிய ஒரு கண்ணாடிப் பாத்திரத்தின் தன்மை தெரிந்தது.

''ரங்கா. நீ போ ரங்கா. உன் வேலை யைப் பாரு. பாபுவை நாங்க பாத்துக்க றோம்'' என்றார் சிங்காரம்.

''நீ போ ரங்கா'' என்றான் பாபுவுக்கு ரத்தம் கொடுத்த தியாகு.

ரங்கன் அவன் தலையை ஒருமுறை கலைத்து விட்டு, ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினான்.




கவிதா டிரைவிங் சீட்டில் அமர்ந்திருந் தாள். கஸ்தூரி ரங்கன் அவளுக்குப் பக்கத் தில் உட்கார்ந்திருந்தான்.

''உங்களை எங்க ட்ராப் பண்ணட்டும் ரங்கா?'' என்று இரண்டாவது முறையாகக் கவிதா கேட்டாள்.

கஸ்தூரிரங்கன் என்ன பதில் சொல்வ தென்று யோசித்தான். சாப்பாட்டு நேரம். இன்றைக்கு கவிதா வீட்டில் யாருமே சாப் பிடப் போவதில்லை. அதனால் அவளை ஏதாவது சாப்பிடச் சொல்லலாம் என்றால் மனது கேட்கவில்லை. சபரியில் வேலை ஒன்றும் கிடையாது. சாயங்காலத்திற்கு மேல்தான் வேலை. எனவே அமைந்தகரை தாண்டிப் போகலாம் என்று தீர்மானித்தான்.

''அமிஞ்சிக்கரை'' என்றான்.

''அங்க யாரு? ஓசரமா, குண்டா, தடி, தடியா வேற யாராவது ஃப்ரெண்ட்லா?'' என்று கேட்டுவிட்டு கவிதா நாக்கைக் கடித் துக் கொண்டாள்.

கஸ்தூரிரங்கனுக்குச் சிரிப்பு வந்தது. கவிதாவை உதாசீனப்படுத்திவிட்டு, அவன் அந்த கறுப்பு ஆள் பின்னால் ஓடியதை அவ ளால் இன்னும் மறக்க முடியவில்லை. அவள் ஏன் ரங்கனைப் பற்றி இவ்வளவு அக் கறை எடுத்துக் கொள்கிறாள்? கவலைப் படுகிறாள்?

**கவலை என்பது உண்மையில் ஒரு மனப் பழக்கமே தவிர வேறு அல்ல. சில பேருக்கு வாழ்க்கையில் எவ்வளவுதான் வசதிகள் இருந்தாலும், உள்ளத்தில் ஏதாவது ஒரு கவலை இருந்து கொண்டே இருக்கிறது. அவர்களுடைய மாபெரும் வசதியாலும் கூட கவலையை மாற்ற முடிவதில்லை. காரணம், அவர்கள் அப்படியே எதற்கெடுத்தாலும் கவலைப்பட்டுப் பழகிப் போய் விடுகிறார் கள். அந்தப் பழக்கத்தை அவர்கள் முயன்று மாற்றிக் கொண்டாலன்றி, ஆயிரம் கோடிச் செல்வங்களை அடைந்த போதிலும் அவர்க ளுடைய கவலை தீராது.**

''இல்ல கவிதா. அங்கதான் நான் உங்க வீட்டுக்குக் கொண்டு வந்த சாப்பாட்டை அனுப்பி இருக்கேன். அங்க இருக்கறவங்க சாப்பாட்டைச் சாப்பிட்டாங்களான்னு தெரிஞ்சிக்கிட்டா எனக்குக் கொஞ்சம் சந் தோஷமா இருக்கும்.''

''ஸாரி ரங்கா.''

''எதுக்கு?''

''நான் ரொம்ப இம்மெச்சூரா கேட் டுட்டேனே?''

''பரவால்லை. ஆம்பளைங்களுக்குக்

# நலமான வாழ்விற்கு காந்த சிகிச்சை

மனித உடலில் தோன்றும் எல்லா நோய்களும் இந்த சிகிச்சை மூலம் பலன் அடையலாம். மருந்து, ஊசி, மாத்திரை, உணவுக் கட்டுப்பாடு, அறுவை சிகிச்சை எதுவுமில்லாமல் எளிய முறையில் நீங்களே கருவிகளை வாங்கிச் சிகிச்சை செய்து கொள்ளலாம். இந்த சிகிச்சை முறை உலகின் முன்னணி நாடுகளான ரஷ்யா, ஜப்பான், அமெரிக்கா, ஜெர்மனி, சைனா, உள்ளிட்ட பல நாடுகளில் மிகச் சிறப்பாகக் கையாளப்பட்டு வருகிறது. இந்த காந்த சிகிச்சையின் மூலம், தலைவலிகள், மூளைக் கோளாறுகள், தூக்கமின்மை, ஞாபகமறதி, முகப்பரு, முகவாதம், வலிப்புகள், கண், காது, மூக்கு, தொண்டைக் கோளாறுகள், வாயுக் கோளாறுகள், அல்சர், அலர்ஜி, அதிக இரத்த அழுத்தம், இருதய வலிகள், மூலநோய், இளம்பிள்ளை வாதம், ஆஸ்துமா, மூட்டுப்பிடிப்புகள், முதுகுவலிகள், கைகால் வீக்கம், சிறுநீரகக் கோளாறுகள், மாதவிடாய், வெள்ளைப்படுதல், அதிக உடல் பருமன், ஆண்மைக்குறைவு, மலட்டுத்தன்மை, சர்க்கரை வியாதி, வளர்ச்சி இன்மை, இடுப்பு வலிகள் உள்ளிட்ட பல நோய்களுக்கு இந்தச் சிகிச்சையின் மூலம் பலன் அடையலாம்.

இந்தச் சிகிச்சையினால் பின்விளைவுகள், பக்க விளைவுகள் கிடையாது.

மருத்துவர்களால் கைவிடப்பட்ட நாட்பட்ட நோய்களுக்கு காந்த சிகிச்சை மூலம் நலமடையலாம்.

ஒரு முறை வாங்கப்படும் காந்தக் கருவியானது குடும்பம் முழுவதும் அனைவரும் பல ஆண்டுகள் பயன்படுத்தலாம்.

இந்தச் சிகிச்சை பற்றிய பத்திரிகை செய்திகள் முன்னாள் இங்கிலாந்து பிரதமர் தாட்சர் காந்த நீர் உபயோகித்ததன் மூலம் இளமையுடனும், கவர்ச்சியுடனும் இருக்கிறார்.

செய்தி : தினத்தந்தி 21.10.1990

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழக மருத்துவ ஆராய்ச்சிப் பிரிவில் மின் காந்தக் கருவிகள் மூலம் மூட்டு வலி, கழுத்துவலி, இடுப்புவலி, தூக்கமின்மை, இரத்த அழுத்தம், மற்றும் பல நோய்களைப் போக்க, தினசரி 10 நிமிடம் 10 நாட்கள் இச்சிகிச்சையினால் 150 பேர் குணம் அடைந்தனர்.

செய்தி : தினமலர் 15.12.1989

காந்த சிகிச்சை மிகச் சிறந்த இயற்கை முறை என ஜப்பான் அரசு அங்கீகரித்துள்ளது.

செய்தி : The HINDU 28.12.1986

ரஷ்யா நாட்டில் காந்த நீரைப் பயன்படுத்தி சிறுநீரகக் கல்லை நீக்கியும், மற்ற சிறுநீரகக் கோளாறுகளையும் நல்ல முறையில் குணப்படுத்தி நிரூபித்துள்ளனர்.

செய்தி : INDIAN EXPRESS 25.4.1989

**வீ. ட்ரீட் யூ மெடி மேக்னட்,**

மருத்துவ நிபுணர் : Dr. M. G. அண்ணாதுரை, E.H.M.P, D.BR, D.R.T, N.D.
78, கத்திவாக்கம் மெயின் ரோட்,
(அசோக் லைலாண்ட் அருகில்)
எண்ணூர், சென்னை - 600 057.

காந்தசிகிச்சை பற்றிய முழு விவரம் அறிய ''காந்தசிகிச்சை'' என்ற புத்தகத்தைப் படித்தால் போதும். புத்தகத்தைச் சான்று தபால் மூலம் பெற ரூ. 14/- அனுப்பவும்.

மேலும் விவரமறிய சுயவிலாசமிட்ட ஒரு ரூபாய் தபால் தலை ஒட்டிய கவர் அனுப்பவும்.

V.P.P. கிடையாது.

Advt.



பாக்கியம் ராமசாமி எழுதும்

ரூ.3

# அப்புசாமியும் அற்புத விளக்கும்

ராஜேஷ்குமார் எழுதும்

# ரஜினி ராஜ்யம்

# சிறுகதை

கதிர்

மாதமிருமுறை



''வர்றவங்ககிட்ட பதமா பேசி, நீங்க மட்டும்தான் சார் சூப்பரா லஞ்சம் வாங்கறீங்க!''

''பார்த்தியா, பார்த்தியா! இந்த லஞ்சப் புகழ்ச்சிதானே வேண்டாங்கிறது.....!''

- சீர்காழி வி. ரேவதி.

தங்களை விட இம்மெச்சூரா இருக்கற பெண்களைப் பாத்தாத்தான் பிடிக்கும்.''

''ஓஹோ!''

''அதுக்காக உடனே கோச்சிக்க வேண்டாம்.''

''சரி'' என்று சிரித்துக் கொண்டே காரைக் கிளப்பினாள். மருத்துவமனை, மரங்கள், டாக்டர்கள் எல்லாம் பின் வாங்கி, கறுகறுப்பான போக்குவரத்து நிறைந்த சாலையில் கார் வெகு இயல்பாக தன்னைச் சொருகிக் கொண்டது

அமைந்தகரை தாண்டி, போக்குவரத்துத் தேய்ந்திருந்த அரும்பாக்கத்தில், பிரதான சாலையில் இருந்து இடதுபக்கம் திரும்பி, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறாவது கட்டடத்தின் முன் காரை நிறுத்தச் சொன்னான் ரங்கா.

நிறுத்தினாள். கண்ணாடி ஏற்றிவிட்டு இறங்கி, குளிர் கண்ணாடியைக் கழற்றி, தலை நிமிர்ந்து பார்த்தாள்.

மணிமேகலை முதியோர் இல்லம்.

''நம்ம சபாரிக்கு பாட்டிங்கள சப்ளை பண்ற எடம்'' என்றான் கஸ்தூரிரங்கன்.

''அப்படின்னா விசாலிப்பாட்டி, காவேரிப்பாட்டி யாருமே உங்களுக்குச் சொந்தம் இல்லியா?''

''ம்ஹூஹூம். நானே தனி ஆளு. எனக்கு இப்படிச் சொந்தக்காரங்க அமைஞ்சாத்தான் உண்டு. வாங்க உள்ள போவோம்.''

அவர்கள் உள்ளே நுழைந்த நேரம், அங்கிருந்த கூடத்தில் சாப்பாடு பரிமாறப்பட்டுக் கொண்டிருந்தது.

இலைகளுக்கு முன் வரிசையாய்க் கிழவிகள் அமர்ந்திருந்தார்கள். காட்ராக்ட் கண்ணாடிகள் அணிந்தவர்கள், அணியாதவர்கள், தலை நரைத்தவர்கள். நரைக்காதவர்கள். சீவி முடித்தவர்கள், முடியாதவர்கள். எல்லோர் எதிரிலும் தண்ணீர் தம்ளர்கள் நிரப்பப்பட்டு இருந்தன. எல்லோர் இலைகளிலும் உணவு பரிமாறப்பட்டு இருந்தது.

சபாரியில் இருந்து, கஸ்தூரிரங்கன் தயாரித்துக் கொண்டு வந்திருந்த உணவு.

அந்தக் கிழவிகளில் ஒரு கிழவி எழுந்து நின்றாள். அவர்கள் யாரும் கஸ்தூரி ரங்கனின் வரவைக் கவனிக்கவில்லை. கஸ்தூரிரங்கனும் அவர்களுடைய உணவின் இடையே தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதற்காகவே நடுவில் செல்லவில்லை.

எழுந்து நின்ற கிழவி கைகள் இரண்டையும் கூப்பினாள்.

''ஆண்டவா'' என்றாள் மெலிந்த குரலில்.

மற்ற எல்லோரும் ஒன்று சேர்ந்து ''ஆண்டவா'' என்றார்கள் கோரஸாய்.

''ஆதரவற்று....''

''ஆதரவற்று.....''

''அநாதையான எங்களை....''

''அநாதையான எங்களை....''

''இவ்விடத்தில் சேர்த்து....''

''இவ்விடத்தில் சேர்த்து....''

''பசிக்கு உண்டு....''

''பசிக்கு உண்டு.....''

''ஓய்வெடுத்து....''

''ஓய்வெடுத்து....''

''நோய் நொடி இல்லாமல்....''

''நோய் நொடி இல்லாமல்....''

''எங்கள் கடைசி காலத்தை....''

''எங்கள் கடைசி காலத்தை....''

''நிம்மதியுடன் கழிக்க...''

''நிம்மதியுடன் கழிக்க....''

''வாய்ப்பளித்த உங்களுக்கு....''

''வாய்ப்பளித்த உங்களுக்கு....''

''நன்றி செலுத்துகிறோம்...''

''நன்றி செலுத்துகிறோம்....''

பிரார்த்தனை முடிந்து உணவு இலையின் முன் உட்காரும் நேரம், அந்தக் கிழவி கஸ்தூரி ரங்கனைப் பார்த்துவிட்டாள்.

''கொழந்தே... ரங்கா.''

''ரங்கா... ரங்கா....''

கஸ்தூரி ரங்கன் அவர்கள் அருகில் சென்றான்.

''விசாலி நல்லா இருக்காளா?''

''காவேரி.....?''

''இந்த ஸ்வீட் காமு செஞ்சதுதானே? இங்க இருக்கறப்ப நானும் அவகூட சேர்ந்து இதே ஸ்வீட்டைப் பண்ணியிருக்கேன். காமு என்னை எப்பவாவது நெனச்சுக்கறாளோ?''

''இன்னிக்கு யார் பொறந்த நாள். எங்களுக்குச் சாப்பாடு அனுப்பியிருக்கியே?''

கஸ்தூரிரங்கன், சுசீதா இருப்பதை மறந்து பாட்டிகள் உலகில் ஐக்கியமாகி விட்டான். ஒரு கிழவி ரங்கனின் தலை வருடினாள். ஒரு கிழவி ரங்கனின் கைவிரல்களில் சொடக்கு எடுத்து விட்டாள்.

சுசீதா ஓர் ஓரத்தில் நின்று தேம்பித் தேம்பி அழத்தொடங்கினாள்.

(தொடரும்)

# வளர்கின்ற இத்தேக்கு கன்றுகள் உங்களுக்கு அளிக்க இருக்கின்ற ரூ. 36 லட்சத்தை இப்படத்தில் கண்டு கொள்ள முடிகிறதா?



போடிநாயக்கனூரில் அனுபவ் தேக்கு மரப்பண்ணையின் ஒரு பகுதி.

உங்களால் முடியும். தேக்குவள பூமியான போடிநாயக்கனூரில் ஒரு அனுபவ் தேக்கு பண்ணையை வாங்கினால் போதும்.
இத்திட்டத்தில் முதலீடு செய்யும் தொகைக்கு ஏற்ப ரூ 36 லட்சம்/ரூ 18 லட்சம் பெறுவீர்கள்.

## திட்டம்

| முதலீட்டுத் தொகை ஒரே தவணையில் செலுத்தினால் ரூ | மரங்கள் எண்ணிக்கை | நிலம் (ச.அடி) | உத்திரவாதமான தேக்கு மரம் (கன அடி) | வருமானம் 6-ம் ஆண்டு முடிவில் ரூ | வருமானம் 12-ம் ஆண்டு முடிவில் ரூ | வருமானம் 20-ஆம் ஆண்டு முடிவில் ரூ |
|---|---|---|---|---|---|---|
| 28,800 | 36 | 3600 | 1440 | 20,000 | 85,000 | 36 லட்சம்* |
| 14,400 | 18 | 1800 | 720 | 10,000 | 42,500 | 18 லட்சம்* |

* 20 ஆண்டுகளுக்குப்பிறகு கன அடி ரூ.2500 என்ற அடிப்படையில் கணக்கிடப்பட்டது.

| மாதத் தவணையில் செலுத்தினால் | திட்டம் - அ ரூ | திட்டம் - ஆ ரூ |
|---|---|---|
| முன்பதிவுத் தொகை | 600 | 600 |
| நிலப்பதிவு செய்ய செலுத்த வேண்டிய தொகை (பதிவு செய்த 3 மாதங்களில்) | 6000 | 3000 |
| மாதாந்திர தவணைத் தொகை | 600 × 49 மாதங்கள் = 29400 | 600 × 24 மாதங்கள் = 14400 |




**அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிமிடெட்.**
11, சோமசுந்தரம் தெரு, தி.நகர், சென்னை-600 017.
போன்: 8283316/8263302/8267248/8254155/8282629/8282833
ஃபேக்ஸ் : 044-8284967.

ஆமாம்! அனுபவ் தேக்கு மரப்பண்ணையில் முதலீடு செய்ய விரும்புகிறேன்.
உடனே உங்கள் விண்ணப்பபாரம் அல்லது உங்கள் பிரதிநிதியை அனுப்பி வைக்கக் கோருகிறேன்.

பெயர் : ..............................

தொழில் : ..............................

முகவரி : ..............................

..............................

பின் : .................. போன் : ..................

இந்த கூப்பனை கம்பெனி முகவரிக்கு அனுப்பவும்.

Advise/3392/93

# அறிக்கைத் திலகம் யார்?



* திருமணம் முடித்தார்!



* பெருமையா? சிறுமையா?



* புதிய பட்டம்!



* புது ஸ்டண்ட்!



* "அரசியல் மாற்றம்..."

● தெ.க. திலீபன், வந்திராயிருப்பு.

? இசு ரென்று நடிகை ஐஸ்வர்யா மதம் மாறி, திருமணம் முடித்ததற்கு அம்மாவிட மிருந்து எதிர்ப்பு வருமா?

! கடைசி வரை கமுக்கமாக இருந்து காரியத்தை முடித்த ஐஸ் மீது மதுவையும் போதை மருந்தையும் அள்ளிக் கொட்டி யிருப்பது பாட்டிதான். அம்மா கவலைப் படவேயில்லையே!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? 'தேச பக்தியுள்ள கட்சி அ.தி.மு.க.' என்று வாஜ்பாயி கூறியுள்ளது பற்றி?

! தேச பக்தியை விட தேவி பக்தி மிகுதி!

● எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

? "செப்டம்பர் 8 அன்று ஜெ ஆட்சி முடிவடையும்" என்று ஆவி சொன்னதாக ஜூவி செய்தி படித்தீரா?

! ஆவி சொன்னாலும் ஜூவி சொன் னாலும் தேவி இப்போதைக்கு நகர்வதா யில்லை!

● வி. சிவா, அரசரடி.

? மக்களுக்குக் கல்வியறிவு ஏற்படுத்தி விட்டால் தங்கள் வேடம் கலைந்து விடும் என்று அரசியல்வாதிகள் உணர்ந்திருக்கும் போது, எல்லோருக்கும் கல்வித் திட்டத்தை எப்படி அவர்கள் செயல்படுத்துவார்கள்?

! பிடியுங்கள் பாராட்டை! நாட்டின் அத் தனை பிரச்னைகளையும் ஒரே கேள்வியில் அடக்கி விட்டீர்கள். உங்களைப் போல எல் லோரும் கேட்க ஆரம்பித்தால்தான் ஆரோக் கியமான மாறுதல் ஏற்படும்.

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? பிரதமருக்குச் சம்மன் அனுப்புவது குறித்து ஜெ.பி.சி. இன்னும் முடிவு எடுக்க வில்லையாமே?

! முடிவெடுப்பதை ஒத்திப்போடுவதில் ஜெ. பி. சி. பிரதமரையே தோற்கடித்து விடும் போலிருக்கு!

● எச். மோகன், மன்னார்குடி.

? பீகார் முதல்வர் ஏழைக் குழந்தைக ளுக்கு முடிவெட்டி விட்டாராமே?

! எந்தத் தொழிலும் நேர்மையாகச் செய் யும் போது கேவலம் இல்லை என்றாலும் லல்லுவைப் பொருத்தமட்டில் பப்ளிஸிடி ஸ்டண்டில் இது புது மாதிரி.

● இரா. வேலாயுதம், திருத்துறைப்பூண்டி ❑

? பஞ்சாபில் ராணுவத்தால் ஏற்படுத்தப் பட்ட அமைதியைக் காஷ்மீரில் ஏற்படுத்த முடியவில்லையே, ஏன்?

! பஞ்சாபில் பெருமளவு அமைதி ஏற்பட் டிருப்பதற்கு ராணுவம் மட்டுமே காரண மல்ல; மக்களாட்சியும்தான். தீவிரவாதிக ளால் படுகொலை செய்யப்பட்ட அப்பாவி

**நீங்கள் கேட்டவை - தராசு**

மக்களை தினம் தினம் பார்த்தவர்கள் உண்மை நிலை உணர்ந்து கொண்டனர். ஜனநாயக அரசியல் முறை ஆட்சிக்கு ஆதரவு தந்தனர். காஷ்மீரில் நிலைமை வேறு.

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? காஷ்மீரில் மக்கள் நிலை எப்படி உள்ளது?*

! ஒரு நாள் தீவிரவாதிகள் கை ஓங்கினால் மறுநாள் எல்லைப் பாதுகாப்புப் படையின் கை ஓங்குகிறது. இரண்டுக்கும் நடுவே மக்கள் செத்துப் பிழைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

● ஈ.ஏ. அப்துல் நஸீர், வலங்கைமான்.

*? அண்மையில் காலமான கர்நாடக முன்னாள் முதல்வர் குண்டு ராவின் சிறப்பு இயல்புகள்?*

! பஸ் கண்டக்டராக இருந்து வாழ்க்கையில் முன்னேறி முதல்வரானார் என்ற அளவில் பெருமைப்படலாம். இந்தப் பயணத்தின் இடையில் அவரைப் பற்றி எத்தனை வாதப் பிரதிவாதங்கள், குற்றச் சாட்டுக்கள், அடாவடித்தனங்கள், கட்சித் தாவல்கள், ஊழல்கள் என்றெல்லாம் பார்த்தால் சிறுமைப்படலாம். குண்டு ராவ் ஆட்சி 'குண்டர்கள் ஆட்சி' என்று வர்ணிக்கப்பட்டது உண்டு. அதில் உண்மையும் உண்டு.

● என். உமாபதி, ராணிப்பேட்டை.

*?' தமிழகத்தில் அரசியல் மாற்றம் ஏற்படும்' என்று திருநாவுக்கரசு கூறியிருப்பது பற்றி....?*

! எல்லா அரசியல் மாற்றங்களுமே அரசியல் ஏமாற்றமாய் இருக்கிறது. இதில் தமிழ்நாட்டில் மட்டும் என்ன வித்தியாசமாக இருந்துவிடப் போகிறது!

● ப. வெங்கட், வலங்கைமான்.

*? கிரிக்கெட் வீரர் தியோதர் மறைவு குறித்து?*

! வாழ்க்கையிலும் சதம் போட்ட சம்ஸ்கிருதப் பேராசிரியர்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? மம்தா பானர்ஜி?*

! 'படுத்துக் கொண்டே போராடுவேன்' என்று புறப்பட்டிருக்கும் பெண்மணி. ஜோதி பாசுவுக்குத் தலைவலி. காங்கிரஸுக்கோ மண்டை இடி!

● பாலகுரு, மயிலாடுதுறை.

*? 'அறிக்கைத் திலகம்' என்று யாரைச் சொல்லலாம்?*

! வாழப்பாடிக்கு இப்படி ஒரு பட்டம் வழங்க வேண்டும் என்று எத்தனை நாளாக உங்களுக்கு ஆசை?

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? 'தேர்தலைச் சந்திக்கத் தயாரா?' என்று வாழப்பாடி சவால் விட்டுள்ளது பற்றி....?*

! சவால்கள், அறிக்கைகள், எஸ்.ஆர்.பி.யின் கோவை உண்ணாவிரதம், சென்னையில் அனுதாப அடையாள உண்ணாவிரதங்கள்.... இப்போது லேட்டஸ்டாக சிறை நிரப்புப் போராட்டமாம். தமிழக காங்கிரஸ்காரர்கள் ஏன்தான் இப்படி அரசியல் எல்.கே.ஜி. களாக நடந்து கொள்கிறார்களோ என்று வேதனையாக இருக்கிறது. அந்த நாளில் காங்கிரஸைக் கார்ட்டூனிஸ்டுகள் யானையாகச் சித்திரிப்பார்கள். இப்போது பூனையாகக்கூடப் போட முடியாதபடிக்குத் தங்களைத் தாங்களே தாழ்த்திக் கொள்கிறார்கள்.

● வைத்யா, திருவெண்ணெய் நல்லூர்.

*? திலகரியாம்! இறக்குமதியாம்! ஊழலாம்! ஏனுங்க, உண்மையாலுங்காட்டிங்களா?*

! வாழப்பாடியாரும் ரங்கராஜன் குமாரமங்கலமும் சுமத்தியுள்ள குற்றச் சாட்டுக்களை அலட்சியம் செய்ய முடியாது. சாட்சியம் எதையும் நாம் இன்று கண்ணால் பார்க்கவில்லை என்றாலும் உயர் ஐ.ஏ.எஸ். அதிகாரி சுந்தரத்தின் அறிவுரையும் எச்சரிக்கையும் புறக்கணிக்கப்பட்டு அவர் இலாகா மாற்றப்பட்டிருக்கிறார் என்பது ஒன்றே போதும், விசாரணை நடக்க வேண்டும் என்பதை உறுதிப்படுத்த. வாழப்பாடி கேட்டுக் கொள்ள, ஆளுநர் விசாரணைக் கமிஷன் என்று தீர்மானிக்குமுன் ஜெயலலிதாவே முந்திக் கொண்டு விசாரணைக் கமிஷன் அமைத்தது சாணக்கியம். விசாரணைக்குத் தன்னையும் உட்படுத்திக் கொண்டது, பெருந்தன்மை. இதைக் ''கண்துடைப்பு நாடகம்'' என்று வாழப்பாடியும் கருணாநிதியும் அலறுவது அபத்தம். உயர் நீதிமன்ற பிரதம நீதிபதியாக விளங்கிய சந்தூர்கர், நீதி தவறி நடப்பார் என்று முன்கூட்டியே தீர்மானிப்பது முறையல்ல; தி.மு.க., காங்கிரஸ் தலைவர்களுக்குப் பெருமை அளிப்பதுமல்ல.



* தலைவலி!



* ''தேசபக்தி ஆகிரக.''

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
இரா. வேலாயுதம்,
த./பெ. துரைராஜ் நாடார்,
மளிகை, மீனாட்சி வாய்க்கால் தெரு,
நாகை ரோடு,
திருத்துறைப்பூண்டி - 614 713.

நீங்கள் கேட்டவை - தராசு



# வள்ளி

நிலா ஜூஸ்

## சாப்பிட்டவர் மாதிரி என்ன ஒரு பளிச்!

கிராமம். அதனால் ஹீரோ படிக்காதவன். ஹீரோயின், படித்துத் திரும்புகிறவள். அதனால் ஒன்-வே டிராஃபிக். இன்டர்வல் சமயம் இன்னொருத்தன் வருகிறான். அதனால் முக்கோணம். எதிர்பார்த்தது போல் வந்தவன் ஏமாற்ற... அதேதான்!

கதையை விடுங்கள், யார் இந்தப் புதுப் பூ? நிலா ஜூஸ் சாப்பிட்டவர் மாதிரி என்ன ஒரு பளிச்! துள்ளலும் எகிறலுமாக முதல் பாதி முழுக்க ரகளை பண்ணிவிட்டுப் பின் பாதியில் அனாயாசமான இறுக்கம். அதுவும் அந்த உண்ணாவிரத சீனில் (நன்றி : ஜெ) கண்ணில் தெரிவது வெறுப்பா? கோபமா? இயலாமையா? சோர்வா? அவமானமா? கிளாஸ்!

ஹீரோவுக்கு வேலையில்லை. வெட்கப்படுகிறார், எப்போதும். ஒரு சீனில் புடைவை வேறு கட்டிக் கொண்டு - வேட்டியிலும் புடைவையிலும் வித்தியாசமொன்றும் தெரியவில்லை.

அமைச்சர் மகனாக வரும் சின்னப் பையனுக்கு டான்ஸ் நன்றாக வருகிறது. காமிராக் கோணங்களில், கண்ணில் விரியும் சலங்கை ஒலி.

பாட்டும், டான்ஸுமாக அத்தனை மென்மையாக அறிமுகமாகிறவர், நம் ஊர் ரயில்கள் மாதிரி சட்டென்று தடம் புரண்டு. வீரப்பா சிரிப்பு சிரிப்பது ஒட்டவில்லை. தவிரவும் அந்தப் பாப்பா முகம் வில்லத்தனம் பண்ணும்போதெல்லாம் என்னவோ பொம்மலாட்டம் பார்ப்பது மாதிரிதான் இருக்கிறது!

படத்தில் ஒட்டாத வேறொரு சமாசாரம் ரஜினி அவ்வப்போது அருளும் அரசியல் மொழிகள். சர்வலோக சஞ்சாரியாகப் பொதுக்கூட்டம் நடக்கும் இடங்களிலும், இலவச வேட்டி, சேலை வழங்கும் இடங்களிலும், சத்திரத்துத் திண்ணைகளிலும் அவர் தோன்றி உரையாற்றுவதெல்லாம் நல்ல தமாஷ்!

லண்டனிலிருந்து வந்த சூட்டில் ராஜா வேலை பார்த்திருக்கிறார். உற்சாகம் ஒவ்வொரு இஞ்ச்சிலும் தெரிகிறது.

அதுசரி, கிராமத்துப் படத்தில் மாட்டு வண்டி போகலாம்; படமே மாட்டு வண்டி மாதிரி போனால்?

கஷ்டம், மகா கஷ்டம்.

- ஆர். பி. ஆர்.

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

வீட்டிற்கு அழகான கதவு
மனதிற்கு இதமான அமைதி

# மாயூரம் டிம்பர் கதவுகள்

* தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம்
* ஈரப்பதம் குறைக்கப்பட்டது.
* ரசாயன கலவை பாதுகாப்பு
* நேர்த்தியான இயந்திர வடிவமைப்பு

Avoid Spending Time & Money to achieve a substitute. Come. Select & Place Your Order at:

# MAYURAM TIMBER

**& General Trading Corpn.**

**Show Room:** 13, Rameswaram Road, T.Nagar, Madras – 600 017. Phone: 445207

H.O. 83, G.S.T. Road, Tambaram – 600 045. Ph: 465297

## MAYAVARAM TIMBER DEPOT

No. 4, Post Office Road, Mayiladuthurai, Quaid-e-Milleth Dist. Phone: 23216